உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 17 | ஆங்கீரஸ௵ வைகாசி௴ கஉ<br>1932௵ மே௴ 14உ | பகுதி 11 |

## கடவுள் வணக்கம்

தாராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
சாசுவத சம்பிரதாயம்
ஓராமன் மந்திரமும் உன்னாமல் முத்திநிலை
ஒன்றோ டிரண்டெனாமல்
ஒளியெனவும் வெளியெனவும் உருவெனவு நாதமாம்
ஒலியெனவும் உணர்வுறாமல்
பாராது பார்ப்பதே யேது சாதனமற்ற
பரமவநு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராமல் அந்நிலை
பதிந்தநிலை பழவடியர்தம்
சீராயிருக்க நினதருள் வேண்டும் ஐயனே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே. (1)

தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
பேயானே தென் கொலோயா ஏகதேசம்
பூரணத்துக் குண்டோதான் புகலல்வேண்டும். (2)

அழுக்காற்றால் நெஞ்சம் அழுங்கியபுன் மாக்கள்
இழுக்காற்றால் இன்பநலம் எய்தார் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் அடியாரின் சிறப்பை அடையவேண்டும் என்று விழை கின்றார்.

(இ-ள்.) ஐயனே! சித்தாந்த முத்தி முதலே! திருச்சிரகிரி விளங்குமாறு எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியே! சின்மயானந்த குருவே! தருதற் கருமை யான நினது திருவருள் முழுதும் தந்தருளும்படி மௌன குருவாகித் தாயை ஒத்த கிருபைசெய்து, இரண்டு திருவடிகளையும் என் சிரசில் தரித்து, அறிவி னிடத்துக் கூடும் நிஷ்டையே நிலையான சம்பிரதாயம் என்றும், பகுத்துணரா மலும், மந்திரத்தை நினைக்காமலும், மோக்ஷநிலையானது ஒன்று இரண்டு என்று சொல்லாமலும், ஒளி என்றும், வெளி என்றும், உரு என்றும், நாத மாகிய ஒலி என்றும் அறியாமல்—காணாமல் காண்பதே எவ்வகைப்பட்ட சாதனங்களும் இல்லாத மேலான அநுபூதி கிடைத்தற்குரிய உபாயம் என் றும் நீ அறிவுறுத்தியவைகளைப் பகுத்துணராமல் அந்த நிலையில் தங்கிய உன் பழ வடியார்களின் சிறப்பை அடைந்திருக்க நின் திருவருள் வேண்டும் என்க.

2. இதனால் தம்மைப் புரவாமல் போனது ஏன என்று கேட்கின்றார்.

(இ-ள்.) ஐயனே! அன்னையின் கருணைக்கு நிகராகிய தண்ணருளை நிறை யத் தாங்கி வைத்தும் அடியேனைக் காவாமல் தள்ளித் தள்ளி வைத்தமையால் போந்த பயன் என்னே? உனது பூரணத்திற்கு ஏகதேசம் என்பது உண்டோ? தயைகூர்ந்து கூறல் வேண்டும் என்க.

"எல்லாம் ஈசனிடத்திலும் ஈசன் எல்லாவிடத்திலும் நிறைந்த வந்நிலை" என்றதற்கேற்ப, சராசரமாகிய ஆன்மாக்கள் எல்லாம் முதல்வனிடத்தும் அம் முதல்வன் எல்லாவற்றிற்கும் உயிர்க்குயிராயும் வியாபித்து நிற்றலால்—என்னை வேறாகத்தள்ளி வைத்தற்கு நீ ஏகதேசப்பட்ட பொருளோ வென்பார் ஏகதே சம் பூரணத்திற்குண்டோ என்றனர்.

3. இதனால் அழுக்காற்றின் தீமையை விரிக்கின்றார்.

(இ-ள்.) பொறாமைக் குணத்தால் மனம் வருந்திய கீழ்மக்கள் தமது துன் மார்க்கத்தால் இன்பமாகிய நன்மையை அடையமாட்டார்கள் என்க.

அழுக்காறு=பொறாமை, அழுங்கல்=வருந்தல், புன்மாக்கள்=கீழ்மக் கள், இழுக்காறு=இங்கே துன்மார்க்கம்.




## விபசாரத் தடை



இவ்வாண்டு ஏப்ரல் மாதம் 1-ந்தேதி முதல் சென்னை நகரில் விபசாரத் தடைச் சட்டம் நடைமுறையில் வந்திருக்கும் செய்தியை நேயர்கள் உணர்ந்திருக்கலாம். பெரிய நகரங்களில் ஒரு சிலர் ஒன்றுமறியாச் சிறுமிகளையும் அநாதைப் பெண்களையும் வைத்துக்கொண்டு மானங்கெட்ட விபசார வியாபாரம் செய்துவருதல் வெளிப்படை. விபசாரத்தின் கொடுமைகளைக் குறித்து விரித்துரைத்தல் மிகை என்றே கருதுகின்றோம். நமது நாட்டுப் புராணங்கள்—இதிஹாஸங்கள் — சாஸ்திரங்களெல்லாம் விபசாரத்தின் தீய விளைவுகளைத் தெளிவாக எடுத்துக் காட்டி, அழுத்தமாகக் கண்டித்திருக்கின்றன. முற்காலத்தில் விபசாரம் செய்த ஆண் பெண்களை ஜாதிப்பிரஷ்டம்—சமூக பஹிஷ்காரம் செய்த வழக்கத்தையும் நாம் அறிகின்றோம். இவ்வழக்கம் இன்றளவும் நமது நாட்டில் இருந்துகொண்டுவருகிறது. விபசாரம் செய்வோர் தங்கட்கும் தங்கள் சமூகத்திற்கும் நாட்டுக்கும் பெருந் துரோகம் செய்கின்றவர்களேயாவார்கள். நாட்டில் சுகாதாரக் கேடு—ஒழுக்கக் கேடு முதலிய தீமைகள் பெருக விபசாரிகள் ஆக்கம் அளிக்கின்றனர். விபசாரம் செய்யும் ஆண் பெண்களிடம் மனிதத் தன்மைக்குரிய சன்மார்க்க நறுங் குணங்கள் அமைதல் அருமை. நமது நாட்டுச் சமூக நலத்தை-மக்கள் வாழ்க்கை நலத்தைப் பாழ்படுத்திவரும் கொடிய விபசாரத்தை ஒழிக்கச் சட்டம் செய்து அமலுக்குக் கொணர்ந்த சென்னை அரசாங்கத்தாரின் நோக்கத்தையும் ஊக்கத்தையும் நாம் பாராட்டுகின்றோம். எனினும் விபசார வழக்கத்தை ஒழிக்கச் சென்னை அரசாங்கத்தார் மேற்கொண்டுள்ள முறை சரியான பயனை அளிக்குமா என்பது ஆராயத்தக்கது.

இப்பொழுது சென்னை சர்க்கார் இயற்றி அமலுக்குக்கொணர்ந்

துள்ள விபசாரத் தடைச் சட்டம் சென்னை நகரில் மாத்திரம் செல்லத்தக்கது. நமது மாகாணத்திலுள்ள மற்ற ஜில்லா—தாலூகா நகரங்களிலுங்கூட விபசார விடுதிகளை வைத்து வியாபாரம் செய்வோர் பலர் இருக்கின்றனர். இவர்களை இந்தச் சட்டம் கட்டுப்படுத்தக் கூடியதாயில்லை. சென்னை நகரில் காணும் அநுபவத்தின்மேல் ஏனைய இடங்களிலும் இச்சட்டம் விரிவுபடுத்தப்பட்டு அமலுக்கு வரும் என்று கூறப்படுகிறது. சென்னை அரசாங்கத்தார் விபசாரத் தீமையை ஒழிக்கும் விஷயத்தில் சிரத்தை காட்டினாராயினும் இதனால் போதிய பயனை எதிர்பார்ப்பதற்கில்லை என்றே கூறவேண்டும். அதாவது "செய்வன திருந்தச் செய்" என்றபடி விபசாரத் தடைச் சட்டம் விபசாரத்தைக் கூடியவரை-சிறிதளவேனும் தடுக்கக்கூடியதாயிருக்கவேண்டும். பெரும்பாலும் வறுமையில் உழன்று வயிற்றுப் பிழைப்புக்கு வழி காணாதவர்களே மானம்விற்கும் தொழிலாகிய விபசார விருத்தியில் இறங்கியிருக்கின்றார்களாதலால், விபசாரத்தைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபட்ட அரசாங்கத்தார் இவ்வேழைகளின் உயிர் வாழ்க்கைக்கும் ஏதேனும் வகை செய்திருக்கவேண்டியது முறை. ஆனால் அரசாங்கத்தாரின் மனம் அதற்கு இடங்கொடுக்கவில்லை. வெறும் சட்டத்தைமட்டும் அமலுக்குக் கொண்டுவந்துவிட்டனர். உலகமே பொருளாதார நெருக்கடியில் தத்தளித்துக்கொண்டிருக்கும் இச்சந்தர்ப்பத்தில் விபசாரிகளின் வயிற்றுப் பிழைப்பிற்கு வகை செய்தல் முடியாத காரியம் என்று அரசாங்கத்தார் சமாதானம் கூற முன்வரலாம். இதை நாம் ஒருவாறு ஒப்புக்கொள்ளுவோம். ஆனால் வயது வராத இளஞ் சிறுமிகளையேனும் ஆதரித்து நல்வழிப்படுத்த அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது என்பதை மறுக்க முடியாது. இது சம்பந்தமாக டாக்டர் முத்துலக்ஷிமி அம்மையார் பத்திரிகைகளில் ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருக்கிறார். அதில்,

"வயதுவராத சிறுமிகளைத் தீய விபசார நெறியினின்று காப்பாற்றுவதே மிகப் பிரதான விஷயம். விபசாரிகள் அநாதைகளான இச்சிறுமிகளையும் தங்களுடன் அழைத்துக்கொண்டு சென்னையை விட்டுப் போவதாகத் தெரிகிறது. இக்குழந்தைகளின் ஜீவனத்திற்கு ஒரு தொகை கொடுக்கமுடியாது என்று சர்க்கார் சொல்லுவது நியாயமல்ல. கல்கத்தாவிலும் பம்பாயிலும் விபசார விடுதிகளில் இருக்கும் வயதுவராத சிறுமிகள் குழந்தைச் சட்டப்படி காப்பாற்றப்படுகின்றனர். சென்னையிலும் குற்றம் புரியும் சிறுவர்-சிறுமியர் சீர்திருத்தப் பள்ளிக்கூடங்கட்கு அனுப்பப்படுகின்றனர். இப் பள்ளிக்கூடங்களில் ஆண்கள் 600 பேர் இருக்கின்றனர். பெண்கள் 50 பேர் மாத்திரமே இருக்கின்றனர். சிறுமிகளின் தொகை குறைவாக இருப்பதற்கு விபசார விடுதிக்காரர்களின் வலைகளில் அவர்கள் அகப்பட்டுக்கொள்ளுவதே காரணமாகும். சர்க்கார் சிறு பையன்

களைக் காப்பாற்றிவருதல்போல் சிறு பெண்களையும் காப்பாற்றல் மிகவும் நீதியாகும்''

என்று அம்மையார் எடுத்துக் காட்டுவதை அரசாங்கத்தார் நன்கு கவனித்தல் வேண்டும். விபசாரத் தடைக்குச் சட்டம்செய்ய இணங்கிய சர்க்கார் இளஞ் சிறுமிகளைக் காப்பாற்ற ஆதரவு நல்காதது வருந்தத்தக்கது.

இதுகாறும் விபசாரத் தொழிலில் ஈடுபட்டுக் காலக்ஷேபம் செய்துகொண்டுவந்தவர்கட்கு அரசாங்கத்தார் ஏதேனும் வயிற்றுப் பிழைப்புக்கு வழிகாட்டியிருக்கலாம். அதைச் சர்க்கார் லக்ஷியம் செய்யாமையால் எந்நோக்கத்துடன் விபசாரத் தடைச் சட்டம் இயற்றிவைக்கப்பட்டதோ அந்நோக்கம் எளிதில் நிறைவேறாது என்பது உறுதி. சென்ற மாதம் முதல் சட்டம் அமலுக்கு வந்தது. விபசாரத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் எல்லாருக்கும் (தெரிந்தவரை) எச்சரிக்கை செய்யப்பட்டது. அவர்களும் தங்கட்கு எத்தகைய தண்டனை கிடைக்குமோ என்று அஞ்சி மூட்டை முடிச்சுகளுடன் வெளியூர்கட்கு அதாவது அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்கட்குப் பயணம் வைக்கத் தொடங்கினர். இவ்விடங்களில் அவர்கள் என்ன செய்கின்றனர்? விபசாரத் தொழிலையே அடியோடு நிறுத்தி விட்டார்களா? வேறு வேலைசெய்து ஜீவனம் செய்கின்றார்களா? இல்லை! இல்லை! சத்திரம்-சாவடிகளிலும், கோவில் புறங்களிலும் தோட்டம் தாவுகளிலும் தங்கள் மாமூல் தொழிலைக் கைவிடாமல் நடத்தி வருவதாகவே கேள்விப்படுகின்றோம். ஒருசிலர் மீண்டும் சென்னைக்கு வந்து தங்கள் வியாபாரத்தை ரகஸியமாக நடத்துவதாகவும் கேள்வி. சட்டம் அமலுக்குவந்த ஒரு மாதத்திலேயே அதன் பயனற்ற தன்மை நன்கு வெளிப்பட்டுவிட்டது. இதற்கென்ன காரணம்? விபசாரிகளின் வயிற்றுப் பிழைப்புக்கு வேறு வழி காட்டாமையே என்பதை நாம் கூறவும் வேண்டுமோ? இன்னொரு முக்கிய விஷயமும் சிந்திக்கத்தக்கது. பாவம்! பரம ஏழைகளான விபசாரிகளைத் தான் இப்பொழுதுள்ள சட்டம் வெருட்டியடிக்கப் பார்க்கிறது. பணம் படைத்துள்ள விபசாரிகளையும், தேவதாசிகள் என்ற பெயரால் விபசாரத் தொழில் நடத்திவருவோரையும் இந்தச் சட்டம் எதுவும் செய்யமுடியாத நிலைமையில் இருக்கிறது. சாதாரணமானவர்களையே கட்டுப்படுத்த முடியாத சட்டம் சிறிது பணம் படைத்த விபசாரிகளை ஒன்றும் செய்துவிடாது என்பது நிச்சயம். அதிலும் தெய்வங்களின் பேராலும் சாஸ்திரங்களின் பேராலும் விபசாரம் செய்கிறவர்களை இந்நிலையில் எந்தச் சட்டமும் அசைத்துவிடாது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். நமது கோயில்களில் இருக்கும் ''தேவதாசி''கள் இப்பொழுது மனித தாசிகளாகவே தான் இருக்கின்றனர்; இவர்களால் கோவில்களில் நிகழும் அநியாய அக்கிரமங்கள் அநந்தம். இக்காலத்தில் இந்து தருமத்திற்கே

பெரும் இழுக்காக இக்கோவில் தாசிகள் சஞ்சரிக்கின்றனர். எனவே கோவில்களிலுள்ள சாமிகளின் போரால் பொட்டுக்கட்டும் அநாசார வழக்கம் ஒழியவேண்டும் என்றால் அதற்குச் சாஸ்திரம் பேச வைதிகர்களும்—சட்டம் பேச வக்கில்களும் வரிந்து கட்டிக்கொண்டு வந்துவிடுகின்றனர். எவ்விதத்திலேனும் வயிற்றுப் பிழைப்பின் பொருட்டு ஏழைப் பெண்கள் ஈன விருத்தியில் ஈடுபடாமல் தடை செய்யவேண்டியது நாகரிக சர்க்காரின் கடமையாகும். இப்பொழுது அத்தொழிலைச் செய்கின்றவர்கட்கு வேறு பிழைக்கும்வழி காட்டிவிட்டு இனிமேல் புதிதாக வருகின்றவர்களை எச்சரிக்கையுடன் கவனித்துச் சட்டவாயிலாகத் தடை நிகழ்த்தினால் ஒருவாறு கருதிய பயன் கைகூடும் என்று நம்புகின்றோம். வயதுவந்த பெண்களையெல்லாம் இப்பொழுது காத்தல் அசாத்தியம் என்று அரசாங்கத்தார் சமாதானம் கூறினாலும் வயதுவாராத இளம் பெண்களையேனும் அவர்கள் ஆதரித்துக் காத்தல் கடமை. இதற்கும் சர்க்கார் சாக்குப் போக்குக் கூறிவிடுவது தருமமாகாது. குழந்தைகளையேனும் ஆதரிக்க முன்வாராத அரசாங்கத்தார் விபசாரத் தடைச் சட்டம் இயற்றி அமல் நடத்துவதில் அர்த்தமில்லை என்றே நாம் கூற விரும்புகின்றோம். சர்க்காரின் விபசாரத் தடைச் சட்டத்தால் பயன் காண வேண்டுமானால் வயதுவாராத இளஞ் சிறுமிகளையேனும் சர்க்கார் ஆதரிக்கவேண்டும்.

அநாதைச் சிறுமிகளின் திறத்தில் அரசாங்கத்தார் அலக்ஷியமாயிருப்பினும் சமூக ஊழியத்தில் ஆர்வங்கொண்ட தலைவர்கள் சிலர் அவர்களை ஆதரிக்க முன்வந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். சென்னை அகில இந்தியப் பெண்கள் சங்கத்தாரும் உஷார் சங்கத்தாரும் ஒருசார் கிறிஸ்தவ சங்கத்தாரும் அநாதைப் பெண்களைப் பாதுகாக்கும் பொருட்டுத் தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டிருப்பது பாராட்டத்தக்கது. இவர்கள் விபசாரத் தொழிலில் ஈடுபட்டிருந்த சிறுமிகளை மீட்டு ஆதரித்து நல்வழிப்படுத்த ஒரு ஆச்சிரமம் காணப்போகின்றனர். இம்முயற்சி வெற்றிபெற வேண்டும் என்று ஆண்டவனை வேண்டுகின்றோம். இச் சமூகத் தலைவர்கள் தரும சிந்தையுள்ள பொது மக்களிடம் நன்கொடைகளை வேண்டுகின்றனர். சென்னை கவர்னர் முதல் பலர் இவ்விஷயத்தில் அநுதாபங் காட்டி நன்கொடை அளித்திருக்கின்றனர். நமது மாகாணத்திலுள்ள ஏனைய மக்களும் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்கின்றோம்.

நாகரிகம், ஈகை, ஒழுக்கம், அறிவு முதலிய குணங்களில் நமது நாடு பேர்பெற்றது. மக்களின் சன்மார்க்கத்திற்கு அடிப்படையாக விளங்கும் சமயங்களின் பிறப்பிடமாகவும் பாரத மாதா ஒளிர்கின்றாள். இத்தகைய பெருமை இருந்தும் பயன் என்ன? வறுமையும் அறியாமையும் கூடா ஒழுக்கங்களும் இக்காலத்தில் மலிந்துகிடக்

கின்றன. இவ்விழி நிலைமையே விபசாரத்திற்கும் அடிப்படையாய் இருக்கிறது. வறுமைக் கொடுமை மிகுந்துள்ள இக்காலத்தில் பொருளற்ற முறையில் சிலர் வீணே பொருளைத் தொலைக்க முன்வருகின்றனர். கோவில் கட்டல்—சத்திரங் கட்டல்—திருவிழாக்களை நடத்தல் முதலிய துறைகளில் அநாவசியமாய்ச் செலவு செய்வதைவிட ஏழை மக்களின் வயிற்றுப் பிழைப்புக்கு வழிகாணும் முயற்சிகளில் ஈடுபடல் அறிவுடைமையாகும். இப்பொழுது பற்றுக் கோடற்ற அநாதைச் சிறுமிகளின் விஷயத்தில் தமிழ் மக்கள் கருணை பொழிவார்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கின்றோம்.

ஓம் தத் ஸத்.



# மல்லிகைப்பூ



(தி. வாசுதேவன்)

நீலவானில் நிறைமதி ஒளிரும்
கோலங்கண் டகங்குழைந்து நிற்பேற்குப்
பின்னும் இன்பம் பெருகும்பொருட்டு
“என்னையும் நோக்குக” எனச்சொல்வதுபோல்
தூயமென் தென்றல் தூதன்மூலமாய்
நீயனுப்பிய மணம் நின்பால் விரைவில்
சேரும் பேற்றைச்சிறியேற் களித்தது.
நாரியர் போற்றும் கலமிகுபூவே,
இயற்கையன்னை எழிற்குருவாய் என்
மயக்கமறுக்கும் மாட்சியின் றுணர்ந்தேன்.
அன்பு நிறைந்தோன் அளவிலா மக்களைத்
தன்னிடம் ஈர்க்கும் தகுதியை நீயும்
பெற்றுளாய் என்பதைப் பெரும்புகழ் நாடுவோர்
உற்றறிந்தொழுகி ஒள்ளிய ராவரோ?
மற்றோ ருண்மையும் மல்லிகைப்பூவே
கற்றனன் உன்னால்; கண்ணைப்பறிக்கும்
அழகை யிப்போது அடைந்துளா யெனினும்
பொழுது விடிந்ததும் பொலிவை இழப்பாய்
உன்னைப்போலவே ஒருநாள் யானும்
பொன்றுவேனதலின் பொறிகள் நன்றாய்
இருக்கும்போதே ஏழைகட்காகத்
திருப்பணியாற்றித் திருப்தியோ டிறப்பேன்.

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்.



## 18-வது ஆண்டின் முன்னறிக்கை.

மாட்சிமிக்க அன்பர்களே!

நாளிது ஆங்கீரஸவருஷ ஆடிமீ 1௳ (16-7-32) நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகைக்கு 18-வது ஆண்டு பிறக்கப்போகிறது. நாம் சென்ற ஆண்டின் தொடக்கத்தில் வாக்குறுதி செய்தபடி நமது "ஆனந்தபோதினி" பற்பல சிறப்பியல்களுடன் பருவத்துக்கேற்ப வளர்ச்சிபெற்று 80-பக்கங்களில் வெளிவந்து உங்களை இன்புறச் செய்துகொண்டிருக்கும் உண்மையை நீங்கள் அநுபவத்தில் அறிவீர்கள். எல்லாத் துறைகளிலும் முன்னேறிச் செல்லுமாறு தமிழ் மக்களைத் தட்டி எழுப்புவதையே "ஆனந்தபோதினி" முதற்பெருங் கடமையாக மேற்கொண்டிருக்கிறது. மக்களின் இன்ப வாழ்க்கைக்கு இன்றியமையாத பழம் பெரும் பொருள்களும் புதுப் பொருள்களும் "ஆனந்தபோதினி"யில் மிளிர்ந்துகொண்டிருக்கின்றன. விகட சம்பாஷணைப் படங்களும், தனிப்பட்ட விகடப் படங்களும், படங்களுடன் கூடிய சிறு கதைகளும், அறிவியல் கட்டுரைகளும் தாங்கி நமது "ஆனந்தபோதினி" உங்களை இன்பக் கடலில் திளைக்குமாறு செய்துகொண்டிருக்கிறது. 18-வது ஆண்டில் இன்னும் சிறந்த முறையில் வெளியிட ஏற்பாடு செய்து வருகிறோம். ஆகையால் "ஆனந்தபோதினி"யின்பால் அன்பு பூண்டு ஆதரித்துவரும் அன்பர்கள் எல்லாரும் 18-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளிது ஆங்கீரஸவருஷ வைகாசிமீ 24-ந்தேதி (6-6-32)க்குள் மணியார்டர் வாயிலாகவோ நேரிலோ எங்களுக்குக் கிடைக்குமாறு செய்யவேண்டுகிறோம். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புகிறவர்கள் 6-6-32-ம் தேதிக்குள் எங்களுக்குக் கடிதவாயிலாகவோ நேரிலோ தெரிவித்துவிட வேண்டும். ஷை சந்தாத் தொகையை முன்பணமாகச் செலுத்திவிடும் நேயர்களுக்கு வழக்கப்படி ஆனிமாத சஞ்சிகையும் அதற்குப் பின்வரும் சஞ்சிகைகளும் சாதாரணத் தபாலில் அனுப்பப்பட்டு வரும்.

*பத்திரிகையை நிறுத்திவிடும்படி தெரிவித்தவர்கட்கு ஆனிமாத சஞ்சிகைமட்டும் சாதாரணத் தபாலில் வந்துவிடும்.*

*நாங்கள் மேலே குறிப்பிட்ட வேண்டுகோளின்படி 18-வது ஆண்டின் சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பாமலும், பத்திரிகை தேவை இல்லை என்ற விவரம் தெரிவிக்காமலும் சும்மா இருந்துவிடும் நேயர்கட்கு "மௌனம் சம்மதம்" என்ற நியாயத்தை அனுசரித்து, அவர்கள் வி-பி-யில் பெற்றுக்கொள்ளவே விரும்புகிறார்கள் என்று தீர்மானித்து நாங்கள் ஆனிமீ சஞ்சிகையை 18-வது ஆண்டின் சந்தாவுக்காக வழக்கம்போல் வி-பி-யில் அனுப்பிவைப்போம். இந்த நண்பர்களை* வி-பி-யைத் திருப்பிவிடாமல் தயைகூர்ந்து பெற்றுக்கொள்ளுமாறு மிகவும் வேண்டிக்கொள்ளுகின்றோம். *இவ்வாறு வி-பி-யைப் பெற்றுக்கொள்ளுகிறவர்கட்கும் சஞ்சிகைகள் வழக்கம்போல் அனுப்பிவைக்கப்படும்.* வி-பி-யில் அனுப்புவதால் தபால் செலவு 4-அணு மணியார்டர் கமிஷன் 2-அணு ஆக 6-அணு அதிகச் செலவும் சஞ்சிகை வந்துசேர வீண் காலதாமதமும் ஆகும். இதில் இன்னொரு முக்கியமான சங்கடம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. வி-பி. வந்தால் ஏழு நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்கமாட்டார்கள். அதற்கு மேல் இருக்கவேண்டும் என்று விரும்புகிறவர்கள்-தாங்கள் எத்துணை நாள்வரை இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்களோ அத்துணைநாட்களுக்கும் நாள் ஒன்றுக்கு இரண்டணு வீதம் ஸ்டாம்பு வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக்கொள்ளவேண்டும். அவ்வாறு செய்தாலும் பத்து நாட்களுக்குமேல் வைத்திருக்கமாட்டார்கள். இந்தச் சங்கடங்களை யெல்லாம் நோக்கும்போது அன்பர்கள் எல்லோரும் சந்தாத் தொகையை முன்பணமாக மணியார்டர்மூலம் அனுப்பி ஆதரிப்பதால் ஒவ்வொருவருக்கும் அணு 4 மிச்சமாகிறது. சந்தாநேயர்கள் இதை முக்கியமாய்க் கவனிப்பார்களென நம்புகிறேம்.

*பினங்கு, சிங்கப்பூர், மலேயா முதலிய வெளி நாடுகளுக்கும் இதர வெளி நாடுகளுக்கும் வி-பி-முறை இல்லையாதலால் அவ்விடங்களிலுள்ள சந்தாநேயர்களெல்லோரும் சந்தாத் தொகையை மணியார்டர் மூலம் முன்பணமாகவே அனுப்பிவிடவேண்டும்.*

*அன்பு நிறைந்த நண்பர்களே! யாம் மேலே எடுத்துக் காட்டிக்*

குறிப்பிட்டிருக்கும் விவரங்கள் எல்லாம் உங்களுக்கும் எமக்கும் அநுகூலமானவைகளாகும். ஒரு சிலரைப்போல் வீண் குதர்க்கவிவாதம் செய்து எமக்கு அநாவசியமான சிரமத்தை உண்டாக்காமல் நேயர்கள் எல்லாரையும் அநுகூல முறையில் நடந்துகொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகின்றோம். விவரத்தை நன்கு ஊன்றி உணராமல் வெறும் தர்க்கஞ்செய்து கடிதங்கள் எழுதி எமக்கு வேதனையை உண்டாக்குவோரின் மனப்போக்கைப்பற்றி யாம் முன் பல தடவை குறிப்பிட்டு வந்திருக்கின்றோம். அவற்றை உணர்ந்திருக்கிற புத்திமான்களுக்கு அவர்களுடைய செய்கை நன்மை பயக்காது என்பதும், யாம் செய்திருக்கும் ஏற்பாடே இருபாலாருக்கும் நலந்தரத்தக்க தென்பதும் நன்கு விளங்கும். ஆகையால் பேரன்புடைய நண்பர்கள் விஷயங்களை நன்கு ஆராய்ந்து வீண் தர்க்கம் செய்யாமல் எம்முடைய ஏற்பாட்டின்படி நடந்துகொள்ளுவார்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கின்றோம்.

## முக்கிய குறிப்பு

முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "18-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுதியனுப்ப வேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் "புதிய ஆண்டுக்கு" என்ற விவரம் எழுதி யனுப்பவேண்டும். பழைய சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலது பக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். அல்லது அவரவருடைய விலாசத்திற்குமேல் அச்சிடப்பட்டிருக்கும். சந்தா நம்பர் குறிப்பிடுவோர் அதைப் பார்த்துக் கடிதங்கள், மணியார்டர்கள் முதலியவற்றில் எழுதவேண்டும். M. 1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் சந்தா நம்பரல்ல, ஆகையால் அதை எழுதிவிடக்கூடாது. மேலே விவரித்தபடி கையால் எழுதப்பட்டிருக்கும் மேல் விலாசங்களில் கையால் எழுதப்பட்ட நம்பரையும், அச்செழுத்துக்களில் உள்ள விலாசங்களில் அச்செழுத்து நம்பரையும் குறித்தெழுத வேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தா நம்பர் தெரியாதவர்கள் முன்பணம் அனுப்பாமல் வி-பி-யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்ளுவது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்திவிடும்படி எழுதுவோரும் மேற்குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித்தெழுத வேண்டும்.

பத்திராதிபர்.

# அநுமந்தன் யுக்தி.

(சமய சஞ்சீவி.)

இன்று சேணம்போட்ட குதிரைமாதிரி தயாரானாள் கனகம். இனி என்ன? "லெப்ட் ரைட்மார்ச்சிங்" பீச்சுக்குத் தவறாது. "அடே போயீ! குழந்தையை எடுத்துக்கொள்—ஐயா வருகிறவரை வீட்டில் ஜாக்கிரதை!" என்று சொல்லிக்கொண்டே கனகம்மாள் ஷோக்காக ஜரிகை பனாரிஸ் புடவை கட்டிக்கொண்டாள். மஹமல் ஜாக்கெட் மாட்டிக்கொண்டாள். இடையில் தங்க ஒட்டியாணம். அதைப் பற்றிக்கொண்டிருக்கும் சாவிக்கொத்து "கல்கல்" என்று "பெல்" அடித்துக்கொண்டிருந்தது. வீட்டுக்குள்ளிருந்து வெளித் திண்ணைக்கு வந்தாள். கடற்கரைக்குத் தனிமையில் உலாவப்போனால்—பார்க்கிறவர்கள் ஏதேனும் நினைத்துத் தொலைப்பார்கள் என்று ஒரு பத்து வயதுப் பையனைத் துணை சேர்த்துக் கொண்டாள். இரண்டு பேரும் "ரிக்ஷா"வில் ஏறித் திருவல்லிக்கேணி "பீச்" என்றார்கள். சென்னை ரிக்ஷாவாலாக்கள் மனிதர்களைப் பார்த்தமாத்திரத்தில் சாதாரணப் போக்குமட்டும் அல்ல அவர்களுடைய உண்மை சொரூபத்தோடு லக்ஷியத்தையுங்கூடப் பிறகு நன்றாய்த் தெரிந்துகொண்டுவிடுவார்கள். ஜார்ஜ் டவுனில் கனகம்மாள் வீடு. திருவல்லிக்கேணியில் உறவினர்களைப் பார்க்கும் சாக்கு வைத்துக்கொண்டு புறப்பட்டுப் போய் தனது ராஜாங்க தர்பாரையுங்கூடக் கவனித்துக்கொண்டு வருவது வழக்கம்.



ஒரு பொருளைக் கண்டால் இது யாருடையது என்ற சந்தேகம் எல்லாருக்கும் சகஜமாக உண்டாகிறது!—இரண்டு பெண்டாட்டிகட்குக் கொட்டு முழக்கான பிறகு செல்லமாய் மூன்றாம் மனைவியை—கனகம்மாளைக் கலியாணம் செய்தார் கரிவரதப்பெருமாள் செட்டியார். கரிவரதப்பெருமாள் செட்டியார் பெரிய வர்த்தகர். சுய முயற்சியால் பணம் சம்பாதித்தவர். வைதிகர். ஏதோ கோவில் குளம் என்றவகை தவிர மற்ற விஷயங்களில் இம்மியும் கைவிடமாட்டார். வயதும் அறுபதுக்குமேலாகிவிட்டது. கீழ் வரிசைப் பற்களெல்லாம் விடைபெற்றுக்கொண்டன. மேல் வரிசையில் மட்டும் சில பற்கள் அங்கங்கே "இருக்கிறோம் இன்னும் இருக்கிறோம்" என்று ஊஞ்சலாடிக் கொண்டிருக்கின்றன. மூக்குத் துவாரங்களினின்றும் சண்முகம் மூக்குத்தூள் குழம்பு ஊற்றெடுத்துக்கொண்டே இருக்கும். அவ

ருடைய மூக்குத் துவாரங்களைச் சற்றே பரிசீலனை செய்யத் தொடங்கினால் ஒன்று துவாதசாந்தத்திலிருந்து ஆரம்பமானது நன்கு விளங்கும். மற்றொன்று அதையுங் கடந்துவிட்டது தெளிவாகும். சரி! இந்த வருணனை இப்பொழுது நமக்கு எதற்காக? ரிக்ஷா எங்கே சென்றது என்று கவனிப்போம்! வெட்கம் என்ன? ரிக்ஷாவில் இந்தமாதிரி தினுசுகள் போய்க்கொண்டிருந்தால்—பார்க்கின்றவர்கட்கு இன்னும் கொஞ்சம் பார்க்கலாம் என்ற குஷால் பிறப்பது சகஜம். "பார்க்காதவர்கள் இல்லையா?" என்று கேட்பீர்களோ? இருக்கிறார்கள். எங்கே? கண்காணாத கானகத்திலோ, மலையிலோ, குகையிலோ கண், காது, வாய்களை மூடிக்கொண்டு கூண்டோடு கைலாசம் போக வேணும் என்று நினைத்துக்கொண்டிருக்கிறவர்கள்தான் இப்பேர்ப்பட்டவர்களைப் பார்க்காமல் இருப்பார்கள். இவர்களிலும் விசுவாமித்திரரின் அண்ணன் தம்பிமார் உண்டு. நாணப்பட்டால் நாடகம் நடக்காது. இனி, ஜமா நடக்கவேண்டியதே.

"சனியன்! எதிர் வெய்யில்! சாயங்காலச் சூரியன் கண்களில் குத்திக் கொண்டே இருந்தால் எப்படிப் பார்க்கவேண்டியவர்களைப் பார்ப்பது" என்று கனகம்மாள் தனக்குள் தானே முணு முணுத்துக் கொண்டாள்.

"மூர்மார்க்கட்" என்றான் ரிக்ஷாவாலா. "வேண்டாம் நேர்வழியைப் பிடி" என்றாள் கனகம்மாள்.

இப்படிச் சொன்னதுதான் தாமதம்—ரிக்ஷாவாலா இளங்காளை மாட்டுக் கொப்பாகத் தடதடவென்று ட்ராம் வண்டியுடன் போட்டி போட்டுக் கொண்டு ஓடத் தொடங்கினான். மவுண்ட்ரோட் கடந்தது. வீட்டைவிட்டு நெடுந்தூரம் கடந்து வந்துவிட்டமையால் கனகம்மாளின் மனோபாவமும் எண்ணங்களும் விகசிக்க ஆரம்பித்தன. மவுண்ட்ரோட்டினின்றும் நேரே கிழக்கே சென்றால் "செனட் ஹௌஸ்" என்பதும். இதற்கப்பால் இருக்கிறது சமுத்திரம். சென்னையில் சாதாரணமாய் எல்லா ரிக்ஷாக்களுக்கும் இப்பேர்ப்பட்ட வியாபாரங்கள் கிடைத்துக்கொண்டே இருக்கின்றன. ரிக்ஷா மவுண்ட்ரோட்டைக் கடந்ததும் ஒரு வெற்றிலை பாக்குக் கடையண்டை நின்றது. உடனே மூன்று கலர் புட்டிகள் "டப் டப் டப்" என்றன. இந்நிலையில் எவனோ ஒருவன் காலணா எறிந்து வெற்றிலைபாக்கு வாங்கினான். வெற்றிலைகளை உதறினான். மந்திரோச்சாரணம் செய்த தண்ணீரைப்போல் வெற்றிலை நீர் கனகம்மாளின் பட்டுப்புடவையின் மீது விழுந்தது. தனியாகப் புறப்பட்டுவந்தால் இந்தமாதிரிச் சங்கடங்களைச் சகித்துக் கொள்ளாவிடில் பயனில்லை என்னும் உண்மையைக் கனகம் தெரிந்துகொண்டிருக்கிறாள், பிறகு மோட்டார் வண்டிக்கு



கோக ரிக்ஷா பறக்கத் தொடங்கியது. கடற்கரைக்குப்போய் இறங்கினார்கள் இரண்டுபேரும். இனி, இங்கிருந்து பையன் கதை ஆரம்பமாகிறது.

இவர்கள் வந்து மணலில் உட்கார்ந்ததுதான் தாமதம் "சூடாக் கடலைப் பட்டாணிக்காரன்" வந்துவிட்டான். பையனுக்கு வாங்கிக் கொடுத்தான். தானும் கொஞ்சம் வாங்கிக் கொண்டான். இராமாயணத்தில் அநுமனைப்போல் நமது கதைக்கு இந்தப் பையன் கிடைத்தான். ஒரே இடத்தில் இருவரும் பக்கம் பக்கமாக உட்கார்ந்திருக்கிறார்கள். பையனுடைய மனமும் நோக்கமும் "கிர் கிர்" என்னும் விளையாட்டுக் கருவிமீதும், சூடான சுண்டல் வடைமீதும், ஜேபியில் இருக்கும் கடலை பட்டாணிமீதும் போய்க்கொண்டிருக்கின்றன. திடீரென்று பையன் ஓட்டம் எடுக்கத் தொடங்கினான். கனகம் எங்கே ஓடுகிறான் என்று பார்த்தான். சமீபத்தில் நான்கு பையன்கள் பந்தாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடன் சேர்ந்துகொண்டான் அநுமந்தன்—அவனை இனிமேல் அப்பெயராலேயே அழைப்போம்.

வழிகளிலே ஒரு குறுக்குவழி- கதையிலே ஒரு உபகதை என்றபடி ஒரு சங்கதி சொல்லவேண்டி யிருக்கிறது. சொல்லட்டுமா? வேண்டாமா? நான் ஒரு வார்த்தை கேட்கிறேன்—நமது இராமாயண—பாரத இதிஹாஸங்களில் யுத்த கட்டங்கள் இல்லாவிட்டால் ஏதேனும் ரஸம் காணமுடியுமா? உப்பில்லாத சப்பைச் சாம்பார் போலாகிவிடும். போகட்டும் இதிஹாஸங்களை ஒதுக்கிவிட்டு பஞ்சாலங் குறிச்சிச் சண்டை—தேசிங்குராஜன் சண்டை-கான்சாயபு சண்டை முதலியவைகளை எடுத்துக்கொள்ளுவோம். இவை கேட்போருக்கு எவ்வளவு மகிழ்ச்சியைப் பெருக்குகின்றன! ஆகையால் யுத்தச் சந்தர்ப்பங் கிடைத்தால் அதை லேசில் விடக்கூடாது. சந்தர்ப்பம் இல்லாவிட்டாலும் சப்பை வெள்ளரிக்காய்க்கு உப்பும் காரமும் சேர்ப்பதுபோல் நாம் கற்பிக்கவேண்டும். எங்கே இரண்டுபேர் கூடினாலும் சுடச்சுட நான்கு வார்த்தைகளை வீசிவிட்டால் கேட்பவர்கட்கும் பார்ப்பவர்கட்கும் உஷார் பிறத்தல் உறுதி. பேசுகின்றவனுக்கும் கூட உற்சாகம் உண்டாகின்றது. அப்பொழுதுதான் சம்பாஷணையும் அழகு பொலிந்து சோபிக்கிறது. இன்னொன்று சொல்லுகிறேன். நமது தமிழ்ப்பண்டித ஐயாமார் வகுப்புக்களில் பாடம் நடத்திக்கொண்டிருக்கும்பொழுதே சிருங்கார ரஸத்தில் இறங்கிவிடுவதை அநேகர் கவனித்திருக்கலாம். இவர்கள் முன்னரே புதிய மூக்குத்தூள் வாங்கி நிறைத்துக்கொள்ளுவது எதற்கு? சற்றே சிந்தியுங்கள்! காரசாரத்தின் ரகசிய உண்மையை இப்பொழுதேனும் நன்கு தெரிந்துகொண்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன். சண்முகம் மூக்குத்தூளுக்கு உற்சாகம் கொடுக்கும் சக்தி இல்லாதிருந்தால் சட்டசபைக்குச் சமீபத்திலும் அதன் கிளைக் கடைகள் இருக்கமுடியுமா? அந்தக் கடைகளில் மூக்குத்தூள் காலி வாகிவிட்டால் அன்றைக்கு சபையை ஒத்திபோடுவதும் தவறுதென்றே நினைக்கிறேன். சரி! இந்த மூட்டை அவிழ்ப்பெல்லாம் இப்பொழுதேன்? யுத்தம் எல்லாக் கதைகளிலும் இருந்தால்—காபிக்குச் சூடும், சுருட்டு முனையில் நெருப்பும்............போதுமா? நமது கதையிலுங்கூட ஒரு யுத்தம் இருக்கிறது என்பதற்கே இவ்வளவுங் கூறினேன். இனி விஷயத்திற்கு வருவோம்.

இக்காலத்தில் பட்டணத்தில் வேறு வேலை ஒன்றும் கிடைக்காமல் போனால் சினிமா உத்தியோகங்களில் நுழைவது தவறுவதில்லை சிலர்க்கு. ஏதோ சம்பளம் கொடுக்கட்டும் கொடுக்காமல் போகட்டும்—அந்தக் கம்

பெனிகளில் விழுந்து சாகவேண்டும் என்பது அன்னோர் ஆசை. இதில் ஒரு சங்கடம். புதிதாக ஒரு கம்பெனி ஆரம்பிக்குமுன்பே உத்தியோகங்கட்காக அலையும் பேய்கள் உள்ளே நுழையவிடாமல் தடுக்கும் "திக்பந்தன"த்திற்கு நிகராக, விசாலமான பலகைகளில் "இங்கே வேலை காலி இல்லை" என்ற விளம்பரம் நான்கு வாயில்களிலும் தொங்கவிடப்படுகின்றன. அப்படியிருந்தாலும் சத்திரச் சாப்பாட்டுக்கு ஆள் சேருவதுபோல் எப்படியோ ஆட்கள் உள்ளே நுழைந்துவிடுகின்றனர். காரியங்களும் நிறைவேறிவிடுகின்றன. இத்தகைய சினிமா வீரர்கட்குச் சென்னையில் இப்பொழுது பஞ்சம் இல்லை. இந்தக் கோஷ்டியைச் சேர்ந்த நான்குபேர் நன்கு வாரி விளைவெடுத்த தலைகளையே மேலும் மேலும் சரிசெய்துகொண்டும், மேலே போட்ட கோட்டுகளை அழகு பார்த்துக்கொண்டும், கைக் குட்டையால் அடிக்கடி முகங்களைத் துடைத்துக்கொண்டும், கம்பீர ஒய்யார நடைநடந்துகொண்டும் பிரவேசித்தார்கள் மணல் அரங்கத்தில். அவர்களில் ஒருவன் கைதேர்ந்த பட்டணம் கில்லாடி. யாரோ ஒருவர் ஒரு வாரத்திற்கு முன் மறந்து கைவிட்ட "நியூஸ் பேப்பர்" கையில் இருக்கிறது. கையில் ஒரு ரிஸ்ட்வாட்சும் கட்டியிருக்கிறான். ஆசாமியின் தினுசைப் பார்த்தால் வழியில்-நடையில் "கலர் குடித்துக்கொண்டிருந்தபோது கனகத்தின்மீது "வருணாஸ்திரம்" பிரயோகம் செய்த வீரனைப்போல் காணப்படுகிறான்.

"வருணாஸ்திரம்" சிறிதேனும் வேலை செய்யவில்லை என்று போர்க்களத்தில் மற்ற பிரயோகங்களை மறைத்து வைத்தல் அவ்வளவு சிறந்ததல்ல. தன்னிடமுள்ள ஏனைய அஸ்திர சஸ்திரங்களையெல்லாம் ஜாக்கிரதையாகவும் முறையாகவும் வழங்கினால் வெற்றியில் ஐயம் இல்லை என்று முடிவு செய்துகொண்டான் அச்சினிமா வீரன். வெற்றிலைபாக்குக் கடைப் பக்கம் தனது "வருணாஸ்திர"த்திற்கு நேர்ந்த அவமானத்தை-தோல்வியைக் கணக்கில் வைக்காமல் "வாயுவாஸ்திரம்" மேலே எடுத்தான்!-பழைய "நியூஸ் பேப்ப', ரின் மேல் காகிதத்தை எடுத்து நேரே காற்றில் பறக்கவிட்டான். அது நேரே சென்று கனகத்தின் தோளில் "டப்" என்று சாய்ந்தது. தனக்குப் படிக்கத் தெரியாவிட்டாலும் காகிதத்தை எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். அதற்கு ஒரு வாரம் வயது முடிந்தது என்னும் உண்மையை மாத்திரம் எப்படியோ கஷ்டப்பட்டு அறிந்துகொண்டாள். இதற்குள் சினிமா வீரன் எதிரில் காட்சி அளித்தான். முகமலர்ச்சியுடன் பேப்பரை எட்டிக்கொடுக்க முயற்சி செய்தாள் கனகம்மாள். அவனோ பலே கைகாரன். உடனே "அக்கினியாஸ்திரம்" பிரயோகிக்காவிட்டால் துன்பம் தொலையாது என்றுநினைத்தான்.



பேப்பரை வாங்கும்போதே தன் கையில் எரிந்துகொண்டிருந்த சிகரெட்டைக் கனகம்மாள் கையில் படும்படி சாகசம் செய்தான்—கனகத்தின் கையில் சுருக்கென்று தாக்கியது. பாவம்! "ஐயோ" என்று ஒரு மரணக் கூச்

சல் போட்டான். பிடித்தது பீதி! காரியம் கெட்டது என்று அஞ்சினான் அவன். எவ்வளவு அஞ்சினாலும் அவனது தைரியம் மட்டும் குறையவில்லை. உடனே ஆறுதல் பேச்சை ஆரம்பித்தான். அத்துடன் தன் சுய விளம்பரத்தையும் கலந்துகொண்டான். அவன் சொல்லுகிறான் "சீச்சீ! இதென்ன பாழும் சிகரட்டு! எவ்வளவு வேலை செய்துவிட்டது: இந்தச் சினிமாவில் சேர்ந்தது முதல் நூற்றுக்கணக்காகச் சம்பளம் வந்தாலும் சிகரெட்டுச் சனியன் மட்டும் என்னை விட்டபாடில்லை. மஹா கெட்ட வழக்கம். என்ன செய்வது ?''

இவ்வாறு அவன் சொல்லிக்கொண்டே கனகம் தனிமையாக இருக்கும் உண்மையை உணர்ந்துகொண்டு சற்றே பக்கத்தில் நெருங்கித் தைரியமாக உட்கார்ந்தான். கனகத்தின் பார்வைகளைக் கவனிக்கும்போது அவனுடைய பாச்சாப் பலித்துவிட்டது என்றே விளங்கியது. சினிமா என்றால் கனகம்மாளுக்கு மஹா பொல்லாத கிறுக்கு. சினிமாத் திரைகளில்—அந்த முத்தங்கள்-தளுக்குகள்-நடைகள்-சிங்காரங்கள்-சிரிப்புக்கள்-முதலியவைகளை நினைத்துக்கொண்டே இரவும் பகலும் தனக்குத்தானே மகிழ்ந்துகொண்டிருப்பவள் கனகம். இந்த மாதிரி விநோதங்களைப் பார்த்துவிட்டு வீட்டுக்குப் போனால் தன்னுடைய கிழட்டு-மட்டி—ஜடப் புருஷனை எட்டு நாளைக்குப் பக்கத்தில் அண்டவிடமாட்டாள். கிழவருக்கு அந்த "ஆக்ஷன்"கள் ஒன்றும் வராது. வெறும் மாடுமாதிரி இருப்பார்: "எங்கேயோ தொலைகிற சந்நியாசியைக் கொண்டுவந்து என் கழுத்தில் கட்டினார்கள்'' என்று முணுமுணுத்துக் கொண்டே இருப்பாள் கனகம். இனி, பிரத்தியக்ஷமாய்-சாக்ஷாத் சினிமா நடிகனே வந்து கண்ணெதிரில் காட்சி கொடுத்தால் அவளது மனம் எப்படியிருக்கும்? நீங்களே சொல்லுங்கள். ஏதோ அவனது வாழ்க்கை-வரலாறுகளைக் கொஞ்சம் கேட்கவேண்டும் என்ற ஆசை கனகத்தைத் துளைத்தது. அவனும் அவளுடைய மனோபாவத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டான்.

"ஆண்களின் பிழைப்பைக் காட்டிலும் பெண்களின் பிழைப்பே சுகம்'' என்று சினிமா வீரன் ஒரு வார்த்தையைப் போட்டான் பார்க்கலாம் என்று.

"ஏன்'' என்று அதே சாக்காக வார்த்தை கொடுக்கத் தொடங்கினாள் கனகம்-சற்று தைரியம் செய்துகொண்டு.

"ஆண்களுக்கு மாதம் நூறு ரூபாய் கொடுத்தால்-பெண்களுக்கு இருநூறு கொடுக்கிறார்கள் சினிமாக்களில்!'' என்று பெருமூச்செறிந்தான். கனகத்திற்கு வாயில் நீர் ஊறத் தொடங்கியது. இவ்வளவு பெரிய சம்பளங்களும் உண்டா? என்று ஆலோசனை செய்துகொண்டே ஒன்றும் சொல்லத் தோன்றாமல் சும்மா இருந்தாள். மீன் வலையில் விழுந்துவிட்டது என்று எண்ணிக்கொண்டான் அவன். இதற்குள் இவர்களுடைய அமர்க்களங்களையெல்லாம் தூரத்தில் நின்று கவனித்துக்கொண்டிருந்த அநுமந்தன் ஓடோடியும் வந்து-சிவ பூஜையில் கரடி புகுந்ததுபோல்!—"ஐயோ! ஐயாவுங்கூட பீச்சுக்கு வந்திருக்கிறார். அதோ!'' என்று மேற்குப் பக்கம் நின்ற கும்பலுக்குக் கைகாட்டி இழவு செய்தி சொன்னான். கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போய்விட்டது விஷயம். பட்டாணிக் கடலை மூட்டையையும் தான் கொணர்ந்திருந்த அடைகளையும் அங்கேயே போட்டுவிட்டு—ரிக்ஷாவாலாவைத் தேடிக்கொண்டு ஓட்டம் எடுக்கத் தொடங்கினாள் கனகம்.

"பாடுபட்டால் வீண்போகுமா?'' என்று சொல்லிக்கொண்டே அச்

சினிமா கில்லாடி பட்டாணி மூட்டையை எடுத்துக்கொண்டு—தன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த நண்பர்களுடன் சேர்ந்துகொண்டான். மூட்டை காலியாயிற்று. மூன்று ஆஸ்திரங்களுக்கு மூன்று அடைகளும் ஒரு கைக் குட்டையும் கிடைத்ததடா என்று பேசிக்கொண்டார்கள்.

வழியில் உடைத்த நான்கு தேங்காய்ச் சில்லுகளைப் பிடித்துக்கொண்டு போய் "பார்த்தசாரதி பிரசாதம்" என்று வீட்டில் கணக்கெழுதிக்கொண்டிருந்த கரிவரதப் பெருமாள் செட்டியார் முன் வீசி எறிந்தான். நல்லவேளையாகச் செட்டியாரின் முகம் அதிர்ஷ்டம் செய்ததாயிருந்தது—அடிபடவில்லை. "இதிலும் ஒய்யாரமா? ஏன் கையில் கொடுத்தால் என்ன" என்று சொல்லிக்கொண்டே பாவம்! அந்தக் கிழவர் அவைகளைப் பொறுக்கி எடுத்து வாயில்போட்டு ஒவ்வொன்றாய் மென்று விழுங்கிவிட்டார்.

கனகம் அநுமந்தனைப் பக்கத்தில் அழைத்து "என்னடா! திருட்டுக் கழுதே! கட்டுச் சோற்று மூட்டையில் எலியை வைத்துக் கட்டியது போல் இன்றைக்கு உன்னை அழைத்துக்கொண்டு போனேன். பாளைகத் துரும்பு மாதிரி "ஐயா, ஐயா" என்று கழுத்தை முறித்துக் கொண்டாயே. அவர் வீட்டுக்குள்ளேயே புளி மூட்டையைப் போல் உட்கார்ந்து கிடக்கிறார் பார்த்தாயா? உன்னைக் காளிக்குப் பலிகொடுக்க வேணும். இவ்வளவு சிறு வயதிலேயே கண் குருடாகிவிட்டது உனக்கு," என்று அதட்டினள்—வயிற்றெரிச்சலுடன்.



"வயதுமீறின உங்களைப்போன்றவர்கட்கே புத்தி மந்தமாகி விட்டபோது—என்னைப் போன்றவர்கட்குக் கண் கெடுவதில் என்ன ஆச்சரியம் அம்மா!" என்றான் அநுமந்தன்—கிண்டலாக.

---

மோட்டார்கார் விற்பவர்:—"தங்களுக்கு எந்த மேக்கர் காரில் பிரியம் சார்!"

கால்நடைக்காரர்:—"எனக்கு எந்த மேக்கரிலும் பிரியம் இல்லை ஆண்டவரே! தெருவில் இந்த இழவெடுத்தகாரர்களுக்குத் தப்புவது மகா துர்லபம். திடீர் என்று தாவித் தாவிக் குதித்தோட வேண்டியிருக்கிறது. நின்றுகொண்டிருக்கும் கார்களைக் கண்டு கொஞ்ச நேரம் சந்தோஷப்படலாம் என்று இங்கே வந்தேன்."

***

உலகச் சுற்றுப் பிரயாணி ஒருவர் ஒரு உஷ்ணப் பிரதேசத்தில் தங்கும்படி நேர்ந்தது. அப்போது அங்குள்ள சுதேசியைப் பார்த்துக் கேட்கிறார்.

"இந்த நாட்டில் மழையே பொழிவதில்லையா?"

சுதேசி:—"மழையா? ஏன் பொழியாமல் என்ன? இந்த நகரில் ஐந்து வருஷ வயதுள்ள தவளைகள் இருக்கின்றன. இவைகள் இன்னும் நீந்தப் பழகவில்லை."




# தேவாலயச் சீர்திருத்த முறை.

—:(o):—

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

தேவாலயங்களை நாம் நோக்குவோமாயின், அவற்றினமைப்பு, நமது சரீரத்தின் அமைப்பை ஒத்திருக்கின்ற தென்பதை யறிவோம். தூலசூக்கும காரண சரீரங்கள், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்னும் பஞ்சகோசங்கள், இதயம், இதயக் குகையாகிய தகராகாயம் முதலிய உடலமைப்பைத் தழுவியே ஆலயங்களமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வுடலிற்குள் ஆன்ம சொரூபத்தைத் தரிசிக்கு மிடங்கள் அவ்விடத்துள்ள ஆன்மா முதலியவற்றைக் காட்டுவதற்கே—சித்திரித்துக் காட்டுவதற்கே—ஓர் ஓவியமாகப் பெரியோரால் பெருங்கருணையோடு மிக்க ஆராய்ச்சியின்மேல் அமைக்கப்பட்டன. ஆகவே, பக்தி மார்க்கத்தைக் கற்பிப்பதைப் பொது நோக்கமாகவும் தத்துவஞானத்தைக் கற்பிப்பதை முக்கிய நோக்கமாகவும் கொண்டு மிளிர்கின்றன நமது தேவாலயங்கள் என்பது ஆன்றோ ரனைவராலும் அங்கீகரிக்கப்பட்ட சுருதி சம்மதமான—விஷயமாம். உதாரணமாக ஒரு சிறு விஷயத்தைக் காட்டுகின்றோம்.

ஆலயங்களில் சாதாரணமாக மூன்று பிராகாரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில பெரிய ஆலயங்களில் ஐந்து முண்டு. மூன்று பிராகாரங்கள் மூன்று சரீரங்களையும், ஐந்து பஞ்சகோசங்களையும் குறிக்கும். இவற்றைச் சுற்றிவந்த பிறகே சுவாமியைத் தரிசிக்கச் செல்லுதல் வேண்டும் என்பது நியதி; இது மூன்று சரீரங்களையும், அல்லது மூன்று சரீரமாகவுள்ள பஞ்சகோசங்களையும் கடந்த பிறகே ஆன்மதரிசனஞ் செய்தல் வேண்டுமென்பதைக் காட்டும். பலிபீடமானது "துள்ளுமறியா மனது பலி கொடுத்தேன்" எனத் தாயுமானப் பெருந்தகையார் சாற்றியபடி காமக்குரோதாதி துர்க்குணங்களை யெல்லாம் பலிகொடுத்த பின்னரே உள் செல்லுதல் வேண்டுமென்பதனை விளக்கா நிற்கும். மூலஸ்தானம் என்னும் சுவாமி யிருக்குமிடம் இதயத்தைக் குறிக்கும். அங்குள்ள இருள் மாயையைக் குறிப்பதாகும். 'மாயை யென்னுந் திரைக்கி கின்னையா ரறியவல்லார்' என்றபடி, அந்த காரத்தைக் கடந்து சென்றோரே ஆன்மதரிசனஞ் செய்தலியலும் என்பதையே அவ்விடம் அறிவிக்கின்றது. அந்த இருளோ (மாயை) பிறவிக்குக் காரணமானது என்பது அந்த இடத்திற்கு இடப்பட்டுள்ள கர்ப்பக் கிருகம் என்னும் பெயரே உணர்த்துதல் காண்க. காரண சரீரம் என்று வேதங்களால் கூறப்படுவதும் இதுவே.

இன்னும் இதுபோன்ற பல தத்துவங்களை யுணர்த்துங் கழகமாக ஆலயங்கள் அமைந்திருக்கின்றன. எடுத்துக்கொண்ட விஷயம் வேறாகலின் இதனை இவ்வளவோடு விடுத்து மேலே செல்வோம்.

இவ்வளவு அரும்பொருள் கொண்டு அமைக்கப்பட்டுள்ள ஆலயங்கள் தற்போது சீர்கேடுற்றுக் கிடத்தலைக்கண்டு அறிவுடையோர் வருந்தாமலிரார். 'உயிரைக் காக்கவல்ல அருமருந்து அவ்வுயிரைப் போக்கவல்ல நஞ்சாக மாற்றப்பட்டது' என்னும் உபமானத்திற்கு, இவ்வாலயங்களை உபமேயமாகப் பொருத்துவது பிழைபாடுடைய தாகாது. மிக்க விபரீதமான முறையில் எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றன. எந்த ஆலயமும் ஆதியில் ஆடம்பரத்துடன் அமைக்கப்பட்டன வல்ல. ஆலயமுறை யமைத்த ஆன்றோரின் நோக்கமும் அது வன்று. பூர்வகாலத்தில் இருடிகளால் அமைக்கப்பட்ட ஆலயங்களனைத்தும் விருட்சங்களே. விருட்சங்களி னடியை ஆலயமாகக் கொண்டே முனிவர்கள் கடவுளை வழிபட்டு வந்தனர். ஒவ்வோராலயத்திலு முள்ள தல விருட்சங்களே இதற்குத்தக்க சான்று பகர்வனவாம். உதாரணமாகக் காஞ்சியில் உமாதேவி மாவினடியில் மணலால் சிவலிங்க மமைத்துப் பூசித்து வந்தனரென்று அவ்வாலய வரலாறு அறிவிக்கின்றது. தேவியார் ஏன் அவ்வாறு பூசித்தனர். அம்மையாருக்குப் பிரியமானால் சங்கற்ப மாத்திரத்தில் எத்துணை பெரிய ஆலயத்தை யமைத்திருக்கலாம்! ஏன் அவ்வாறு செய்யவில்லை? என்று ஆலோசித்துப் பார்த்தால் உண்மை விளங்காமற் போகாது. இத்தகைய ஆலயங்களில் தற்போது நிகழும் முறைகளென்ன? கண்காட்சிச் சாலையாகவும், கூத்தாட் டவைக்களமாகவும், வியாபார ஸ்தலமாகவும், திரவியந்தேடும் தொழிற்சாலை யாகவு மன்றோ மாறிக்கிடக்கின்றன. ஐம்புலச் சேட்டைகளை யடக்கு நெறியைக் காட்டவேண்டிய ஆலயங்கள் அவற்றை யதிகப் படுத்துவனவாய் மாறிவிட்டன.

உற்சவ முறைகளைப் பார்ப்போம். வாணவேடிக்கைளும் தாசிகள் நடனங்களும் மேளவாத்தியங்களும் அலங்கார வகைகளும் ஐம்புலவேடரின் வேட்டைக் கோட்டங்க ளல்லவோ. இவை எந்த வகையில் பக்தியை யூட்ட வல்லனவெனக் கேட்கின்றோம். இவற்றிற்காக ஆயிரக்கணக்கிற் பணத்தைச் செலவிடுவது நியாயமாகுமா? 'சுவாமிக்கு மனைவி யொருத்தி; வைப்பாட்டி யொருத்தி; மனைவியைவிட வைப்பாட்டி யிடத்தில் அவருக்கு மெத்தப் பிரிய முண்டு. சுவாமி வைப்பாட்டி வீட்டிற்குப்போய் வந்தாரென் றெண்ணி மனைவி அவரை உள்ளே விடாமல் வழி மறித்துக்கொண்டு, அவருக் குடந்தையா யிருந்தவர்களெனக் கருதி உடன் வந்தோரைத் தோழிகளைக்கொண்டு அடிக்கச் செய்கிறார். (இதற்குப் பட்டையடி உற்சவமென்று பெயர். வாழைப்பட்டையா லடிப்பார்கள்.) சுவாமி மனைவியோடு சயனித்துக் கொள்ளுகின்றார்; படுக்கை யறையை நன்று யலங்கரித்துக் கட்டிலொன்றில் சுவாமியையும் அம்மனையும் படுக்க வைப்பது ஒரு உற்சவம்.' இவ்வாறு பொருத்தமற்ற உற்சவங்களெல்லாம் மாந்தர்க்குப் பக்தி யுண்டாக்க வல்லவையோ! கூட்டமாகக் கூடும் சனங்கள் வேடிக்கைக்காக வருகின்றார்களா? அல்லது பக்தியின் பொருட்டு வருகின்றார்களா? வேடிக்கை காமக்குரோதாதி துர்க்குணங்களை யகற்றுவனவோ? வளர்ப்பனவோ? சுவாமிக்கு முன்னால் 'வரிவிழி கொண்டு சுழியவெறிந்து மாமயில்போல்' நடித்துச் செல்லும் தாசிகளைச் சூழ்ந்து, சுவாமியுடன் செல்வோரினும் பதின்மடங் கதிகமாகச் செல்

லும் மாந்தர்க் குளதாவது சாமி பக்தியோ காமி பக்தியோ? தஞ்சாவூர் தங்க நாத சுரத்தைச் சூழ்ந்து செல்வோர்க்கு நாதசுரம் எவ்வளவு பக்தியைப் புகட்டும்? ஆகாய பாணங்களும் அதிர் வெடிகளும் அவுட்டுகளும் மத்தாப்புகளும் மாந்தர்க்கு எந்த வகையில் நன்மை புரியும்? வேடிக்கை காட்டும் விஷயத்திலா பக்தி யூட்டும் விஷயத்திலா? கண்களைப் பறிக்கத்தக்கதாக அலங்கரிக்கப்பட்ட பத்துகஜ சுற்றளவுள்ள பிரபையின் நடுவில், யானைகளுக்குப் போடத்தக்க பருமனுள்ளவுள்ள பருத்த மலர்மாலைகள் போடப்பட்டு, பொன்னரிமாலை மதாணி முதலிய வாபரணங்களா லலங்கரிக்கப்பட்டுள்ள, சாதாரண எலுமிச்சம்பழ வளவுள்ள சுவாமியின் வதனத்தைக் கண்டு, அவரை நினைவு கூர்ந்து பக்திப்பெருக்கி லாழ்ந்து அவரைத் தியானிப்பது சாத்தியமாவ தெப்படி? சுவாமியைப் பார்க்க விரும்பும் மெய்ப்பக்தர்களின் பார்வையையும் தன் பக்கலிழுத்து 'ஆ ஆ! இந்த அலங்காரிப்பு என்ன நேர்த்தியாயிருக்கின்ற'' தென்று வியக்குமாறு அவர்தம் மனோ வெழுச்சியைத் தூண்டி, சுவாமியினிடத்துச் செல்லாவாறு தடுக்கத் தக்கனவான அலங்காரங்கள் ஏனோ?' 'சுவாமி என்ன அழகா யிருக்கின்றார்?' எனச் சனங்கள் சொன்னால், அம்மொழி, அலங்காரத்தைப் பற்றியேயன்றி சுவாமியைபற்றிய தன்று.

சாதாரணமாகவே சிற்றறிவினனுகவுள்ள மனிதன், அறிவை மயக்கும் மதுவை யுண்டு, அறிவையும் போக்கிக்கொள்ளுந் தன்மைபோல சிறிதும் கட்டுக் கடங்காமல் விஷயங்களி லோடித்திரியும் பொறிகளை, அவை வெகு நன்றாக ஓடித்திரியும் பொருட்டுப் பற்றுக்கோடுகளாகப் பல விஷயங்களைக் கொடுப்பது அவற்றைக் கெடுப்பதாகு மன்றோ! வெறும் வாயை மெல்லுகிறவனுக்கு அவல் கிடைத்தால் சொல்ல வேண்டியதேயில்லை. ஐம்புலனடக்கிய அருந்தவரும் அவை மீண்டும் தம்மைப்பற்றி வருத்தப்படுத்தாதபடி எச்சரிக்கையா யிருக்கக் கடமைப்பட்டிருக்கின்றன ரென்னின் ஏனையோரைப் பற்றி இயம்புவ தென்ன?

இவ்வாறு எல்லாப்படியாலு மெண்ணினால் எவர்க்கும் எள்ளளவு நன்மையும் நல்குதலில்லா இந்நாடக வுற்சவங்களைச் சுவாமியின் பெயரால் மதத்தின் பெயரால் நடத்துவது எவ்வளவு பெரிய அநியாயம்! இவற்றிற்காகச் செலவிடப்படும் தொகை எவ்வளவு! கோயிலார் செலவிடும் கோடிக்கணக்கான பணம் ஒருபுற மிருக்க, ஏழை மாந்தர்கள் உண்மை யறியாமல் கடனுடன்பட்டு சிறிதும் உபயோகமற்ற வழியில் செலவிடும் திரவியம் எவ்வளவு? அவர்கள் படும்பாடுக ளெவ்வளவு. இவ்வளவும் வீண்—முழுவதும் வீண்—கடலிற் கரைத்த பெருங்காயம்—ஆற்றிற்கரைத்த புளி—என்று அவர்கள் உணர்வதில்லை. உணர்ந்தாலும் கூட்டத்தைச் சேர்க்கக் கோயில்காரர்கள் செய்யும் ஆர்ப்பாட்டங்கள் அவர்களைக் கண்ணிழக்க செய்கின்றன. ஆகவே, ஆலயங்களில் உற்சவ காலங்களில் செய்யப்படுவன வனைத்தும் மீன்களைப் பிடிக்கத் தூண்டிலிலிடும் உணவுப் பொருள்களே. காஞ்சிபுரத்து உற்சவத்திற்குச் சென்னையிலிருந்து போகும் ஒருவரை இக்கேள்வி கேட்போம். 'ஐயா! பக்தரே! காஞ்சிபுரத்திலுள்ள வரதராஜப்பெருமான் அங்கே எப்பொழுதும் இருக்கிறாரா? அல்லது தம்மைக் கொண்டாடப் போகிறார்களென்றெண்ணி இவ்வுற்சவத்திற்கு மாத்திரம் அங்கு வரப்போகிறாரா? எப்போதும் அங்கே யிருப்பவராயின் இதற்கு முன்னர் உற்சவம் நடவாத காலத்தில் அவரைப்போய் தரிசியாம லிருந்ததேன்? போகட்டும், சென்னை திருவல்லிக்

கேணியிலுள்ள ஸ்ரீபார்த்தசாரதிப் பெருமானுக்கும் வரதராஜப் பெருமானுக்கும் ஏதேனும் ஏற்றத்தாழ்வுண்டோ? வரதராஜப்பெருமான் தரும் நன்மையைப் பார்த்தசாரதி தரமாட்டாரோ? தருவதாயின் காஞ்சிபுரத்திற்குப்போவதேன்? அதிலும் உற்சவகாலத்திற் போவதேன்?' இக்கேள்விக்கு அவரிறுக்கத்தக்க விடை யாது? 'சுவாமிகளில் பேதமில்லை; இருவரும் ஒருவர்தான். உற்சவகாலத்தில்தான் போக வேண்டுமென்பது அவசியமன்று. சுவாமி எப்பொழுதுந்தா னிருக்கிறார். ஆனால், இப்பொழுது போனால் வேடிக்கையாயிருக்கும்; அந்த வேடிக்கை பார்க்கத்தான் போவது' இதுதான் விடை. இதைத் தவிர வேறேதேனும் சொல்ல இடமுண்டோ? உண்மை யிவ்வளவு தானே.

உற்சவஞ் செய்வோரும் கூட்டத்தைத் திரட்டுவதற்காகவே இவ் வேடிக்கைகளை யியற்றுகின்றனரே யன்றிப் பக்திப் பெருக்கால் செய்வதாகச் சொல்லச் சிறிதும் துணிவு பிறக்கவில்லை. ஆகவே, இதுகாறும் இச்சிறு ஆராய்ச்சியால் ஆலயங்களில் நடக்கும் உற்சவக்கிரமங்கள் கிரமமானவைகளாயிராமல் யாதொரு பயனும் பயவாமற் போவதுமன்றி தீமையே பயக்கும் அக்கிரமமான நெறிகளில் நடைபெறுகின்றன வென்பது வெள்ளிடைமலை.

பக்தியை—கடவுள் கொள்கையை—யாவருள்ளத்திலும் பதியச்செய்ய வேண்டுமென்னும் சிரத்தை ஆலய உற்சவங்களில் சம்பந்த முடையோருக்கிருக்கின்ற துண்மையாயின், அவர்கள் அனேக வாண்டுகளாக நடந்துவரும் இவ்வுற்சவங்களால் ஏதேனும் நன்மை யுண்டா யிருப்பதாக வறிந்திருப்பார்களாயின், இனியும் அவற்றைத் தொடர்ந்து நடத்தட்டும். இதுகாறும் கவனிக்கவில்லை யெனின் இனியேனும் ஆராய்ந்து பார்க்கட்டும். ஒன்றும் பயனில்லை யென்பதை அவர்தம் மனச்சாட்சியே அவர்களுக்கு மாண்பா யுரைக்கும் இல்லை யென்பதை யவர்களுணர்வார்களாயின் இவ்வாறு செய்யட்டும். எவ்வாறெனின்:—

முதன் முதலாக இப்போது கூலிக்கு மாரடிப்போர்போல கூலிக்குச் சுவாமி பூசை செய்வோராகவும, பூசைத் தொழிலை பரம்பரைத் தொழிலென்று பாத்தியதை கொண்டாடிப் பூசை செய்வோராகவும் இருப்போரை விலக்கி, ஒழுக்கம் கல்வி பக்தி முதலியவற்றில் தலைசிறந்து விளங்கும் மெய்யடியார்களை—தமக்கென உண்மைப் பக்தியோடு பூசை செய்வோரா யிருப்பவர்களை—தேடி யமர்த்துதல் வேண்டும். குறிப்பிட்ட பூசா காலங்களில் அவர்கள் பூசை செய்தல் வேண்டும். இப்பொழுதும் அவ்வாறு நடைபெறுகின்றதெனினும் இது கூலியின் பொருட்டுச் செய்யப்படுவது.

"கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க" விரும்புவோர்
செய்கின்ற பூசை யிது.

இந்த முறை அறவே மாற்றப்பட்டுத் தம் சொந்த சிரத்தையோடு செய்யப்படுவதா யிருத்தல் வேண்டும். பூசையைக் கவனிக்கவும் சுவாமியைத் தரிசிக்கவும் அக்காலத்தில் வருவோர் பூசை முடியும் வரையில் அமைதியாயிருந்து பகவத்தியானஞ் செய்து கொண்டிருத்த லவசியம். பூசையின் முடி

வில் பகவத்தியான மகிமையையும் ஒழுக்கத்தின் உயர்வையும் இன்னோன்ன பிறவற்றையுங் குறித்துப் பூசை செய்வோராகிய அவ்வடியார் சுருக்கமான தோர் பிரசங்கஞ் செய்து தீபாராதனையுடன் பூசையை முடித்தல் வேண்டும். பெரிய தேவஸ்தானங்களில் இவர் போன்ற பல அடியார்களிருத்த லவசியம். பூசை செய்யும் இரண்டொருவர் தவிர வனையோர் அவ்வூர்களிலும் அவற்றைச் சேர்ந்த கிராமங்களிலும் சென்று அவ்வூராருக்குச் சௌகரியமான காலங்களில் ஒழுக்கத்தையும் பக்தியையும் உண்டாக்கத்தக்க சன்மார்க்க போதங்களைச் செய்துவருதல்வேண்டும். கூடுமாயின் ஆண்டிற் கொரு முறையேனும் இருமுறையேனும் மகாநாடுகள் கூட்டி தக்க பெரியோர்களைக் கொண்டு மத ஒழுக்க சம்பந்தமான சொற்பொழிவுகளை நிகழ்த்தச் செய்தல் வேண்டும். மத சம்பந்தமான கல்விகளைக் கற்பிக்கவும், ஒழுக்கங்களை வற்புறுத்திப் பசுமரத் தாணிபோல் மனத்திற் பதிப்பிக்கவும், தக்க கல்விச்சாலைகளை நிறுவுதல்வேண்டும். இத்தகைய நெறிகளில் தேவஸ்தானங்கள் தொண்டாற்றி வருவதாயின் இந்நாடு எந்நாட்டினுஞ் சிறந்த பொன்னாடாகத் திகழுமே. புண்ணியநாடு என்னும் தன் பண்டைப் பெயரைப் புதுப்பித்துக் கொண்டு பொலியுமே.

ஆண்டு விழாக்கள் இப்பொழுது நிகழ்த்தப்படும் முறைபோல், வீண் ஆடம்பரங்களின்றி, பொருளற்ற வாகனங்களின்றி, சுவாமிக்குப் பொய்க்கால்கள் போலிக்கரங்கள் வைத்து எலுமிச்சம்பழ வளவுள்ள வதனத்தையுடைய விக்கிரகத்திற்கு இரண்டு முழக் கரங்களையும், மூன்று முழக் கால்களையும் வைத்தல் போன்ற ஆபாசச் செயல்களும் இல்லாமல் செய்வது நலமாகும்.

பூசா காலங்களில்—தொழுகைக் காலங்களில்—தியான காலங்களில் பிற மதத்தினர் நிசப்தமா யிருப்பது வழக்கமாக நமது ஆலயங்களில் மாத்திரம் மேளம் வாசிக்கப் படுவதற்கு முக்கிய காரண மொன்றுண்டு. அது யாதெனில்:—இந்துக்கள் நாதத்தை முக்கியமாகக் கொண்டவர்கள். நாதம் ஈசுவர சொரூபமெனவும், நாதத்தினின்று சகலமுந் தோன்றின வெனவும் நூல்கள் நுவலும். பிரணவமும் நாதவடிவமே. சிவம், சத்தி, நாதம், விந்து சதாசிவன், மகேசுரன், உருத்திரன், விட்டுணு, பிரமன் என ஈசுர பேதம் ஒன்பது வகையாகக் கூறப்பட்டிருத்தலுங் காண்க. 'நாதபிந்து கலாதி நமோ நம:' எனத் துதிக்கிறார் அருணகிரியாரும். 'விண்ணாதியாம் பூதமே நாதமே' யெனக் கூறுகின்றார் தாயுமானவரும். மேலும், நாதம் ஓர் வகைத் தத்துவமாகவும் சாற்றப்படுகிறது. பிருதிவி முதல் நாதம் இறுவாயுள்ள தத்துவங்கள் முப்பத்தா றென்பர். இதைத் தாயுமானவர் 'ஐந்து வகை யாகின்ற பூதமுதல் நாதமும்' என்கின்றார்.

அன்றியும், சமாதி யப்பியாச காலத்தில் பிரஹ்மரந்திரத்தி னின்றும் தசவித நாதங்களுண்டாகும் என யோக நூல்கள் கூறுகின்றன. அவற்றுள் முதலாவது கருவண்டின் சப்தம்போல் கண்ணென்றிருக்கும் இவ்வாறு முறையே தண்டு, சங்கம், மணி, தாளம், புல்லாங்குழல், பேரிகை, மிருதங்கம், இடி, மேக வொலி இவற்றை யொத்திருக்கு மொலிகள் தோன்று மென்பர் பெரியோர். ஆகவே, ஆலயங்களில் இவற்றி னுண்மையைக் குறிக்கவே மணி சல்லரி பேரிகை சங்கு முதலிய வாத்தியங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. தவிர,

மனோலயத்திற்கும் வாத்தியவொலி அனுகூலமான தென்று பெரியோர் அனுபவ வாயிலாய்க்கண்ட பின்னரே அதனை யமைத்தனர். தியானிப்போ னுடைய மனம் அந்த நாதத்துடன் கலந்து விடுமாயின், மதுவுண்ட வண்டு போல் பகவானது திருவடிக் கமலத்தில் ஒடுங்கி நிற்கும். இத்தியாதி உண்மை களை யோராது ஐந்நூறும் அறுநூறும் செலவிட்டு வாத்தியக்காரரை யமைப் பது அறிவுடைமை யாகாதே.

ஆகவே, அறிவுடையோரும் பக்திமான்களுமாகிய 'ஆனந்தன்' வாசக கண்பர், விரிவஞ்சி சுருங்க வரைந்த இக் கட்டுரையைக் கவனித்து வாசித்து, இதிற் கூறப்பட்டுள்ள விஷயங்களையும் கூறாமல் விடப்பட்ட விஷயங்களுளவா யின் அவற்றையுங் கூட்டி யாராய்ந்து, ஆலயங்களில் தற்காலத்தில் மதத்தின் பேராலும் சாமியின்பேராலும் நடக்கும் அக்கிரமச் செயல்களை யகற்றி, நம்முன் னோரின் கொள்கைக்கேற்ற பெற்றியின் நடைபெறச் செய்தல்வேண்டுமென்னு முறுதியை யுள்ளத்துய்த்துத், தாங்கள் இம்முறைகளுக் குட்படாமலிருத்த லோடு பிறர்க்கு மிதைப் போதித்துத் தக்க முயற்சிசெய்து பண்டைக்கால முறையை நிலைநாட்டப் பாடுபடுவராயின் மதத்திற்கும் தேசத்திற்கும் பெரிய உதவி செய்தவராவர் என்பதை வற்புறுத்துகின்றோம்.

# கக்ஷிச் சண்டைகள்.



நமது நாட்டில் கருத்து வேற்றுமைக்குக் கண்ணியம் கிடையாது. எவ் வளவு மேதாவிகளா யிருந்தாலும் கக்ஷி என்ற பேச்செடுத்தால் போதும்—மனி தத் தன்மையை இழந்துவிடுகின்றனர். அரசியல், சமூகவியல், சமயவியல்— எதை நோக்கினும் பிளவு—எரிவு. பாம்பாய்ச் சீறிப் படமெடுக்கின்றனர். புலி யாய்க் கர்ச்சித்துப் பாய்கின்றனர். கழுதையாய்க் கத்துகின்றனர். நாயாய்க் குரைக்கின்றனர். எனவே விமோசனம் எப்பொழுது ?

# புகழுடம்பு பெற்ற புனிதன்

(தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பீ. ஏ.)

கவியரசர் கம்பர்தம் கவிதையில், புகழ்பெறுதலையே தன் முக்கிய நோக்கமாகக் கொண்டு வாழ்ந்து அந்நோக்கம் முட்டின்றி நிறைவேறத் தன்னுயிரையும் கொடுத்த பெருமகன் ஒருவன் உண்டெனில் அவன் சடாயுவே யாகவேண்டும்.

"தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு"

என்று கவியரசர் கூறுஞ் செஞ்சொற்களே அவன்றன் பெருமையை இனிது விளக்கும்.

அயோத்தி நகரை அறநெறிவழாது ஆண்ட அண்ணலான தயாதனின் உயிர்த்துணைவனுய் அமைந்த கழுகரசன் பஞ்சவடியைத் தன்னிருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றான். "தாயுரைசெய, தந்தையேவ" கானகச் சென்ற கமலக் கண்ணனை இராமன் பஞ்சவடியில் அஞ்சாத நெஞ்சு படைத்த கழுகின் வேந்தனைக் காண்கின்றான்.

"முந்தொரு கருமலை முகட்டு முன்றிலின்
சந்திர னொளியொடு தழுவச் சாத்திய
அந்தமில் கனகடல் அமரர் நாட்டிய
மந்தர கிரியென வயங்கு வான்றனை"க்

கண்ட வீரர் இருவரும் கழுகுருக்கொண்டு கானகத்தில் கரந்துறையும் அரக்கனே இவன் என்று முதலில் ஐயுற்றார்கள். எனினும் பின்னர் அவன் இவர்களை யாவர் என வினவி இவர்கள் தயரதன் மக்கள் என்பதறிந்தபின் தன் அன்பன் மக்கள் தன்னை அடைந்ததால் உவகை மிக்கடைந்து பின்னர் "வேந்தர் வேந்தன்றன் வரைத் தடக்தோளிணை வலியவோ" என்று கேட்கவும் அதற்கு மாற்றமாக மன்னன் மைந்தர்கள் "மறக்கமுற்றாதன வாய்மை காத்தவன் துறக்கமுற்றான்" எனச்சொல்லவும் "இறக்கமுற்றான் என ஏக்கம் எய்தினன், உறக்கமுற்றான் என உணர்வு நீங்கினன்" என்று கவியரசர், கழுகரசன், காவலன்பால் கொண்ட காதலை இனிது விளக்குவாராயினர். காவலன் இறந்ததை உணர்ந்த கழுகரசன் ஆற்றும் உரைகள் அளவிறந்தன. மன்னன் மைந்தரைத் தன் மக்களாகவே கருதி,

"மருவினிய குணத்தவரை இரு சிறகால்
உறத்தழுவி மக்காள்! நீரே
உரியகடன் வினையேற்கும் உதவுவீர்
உடலிரண்டுக்கு உயிரொன்றானன்

பிரியவுந்தான் பிரியாதே இனிதிருக்கும்
உடற்பொறையாம் பீழை பாராது
எரியதனில் இன்றேபுக்கு இறவேனேல்
இத்துயரம் மறவேன்'' என்று

எருவை மன்னன் தயரதன் ஆவிநீத்தபின் தான் உயிர்வாழ மனமற்றவனும் எரியில் விழுந்து இறக்கத் துணிகின்ற ஒரு செயலே உண்மைக் காதலின் உயரிய நிலையை உணர்த்துவதாகும். இவ்வாறு உயிர்விட்டுத் துறக்கம் புக எண்ணிய ஏந்தலை மக்கள் இருவரும் இடைவீழ்ந்து தடைசெய்ய, அவர்தம் நலம் கருதி உயிர்தாங்கி வாழ இசைகின்றான். இராம வீரன் கானகம் எய்திய காரணம் அறிந்தபோது,

"உந்தை உண்மையனாக்கி, உன் சிற்றவை
தந்தைசொல்லைத் தலைக்கொண்டு, தாரணி
வந்த தம்பிக்கு உதவிய வள்ளலே
எந்தை வல்லது யாவர் வல்லார்''

என்றும்

"வல்லைமைந்த அம்மன்னையும் என்னையும்
எல்லையில் புகழெய்துவித்தாய்''

என்றும் கூறும் செம்மை சான்ற சொற்கள் அவன் அறநெறி தவறா அருந்தகை என்பதை விளக்கும். தாதையிழந்த மைந்தர்க்கு, தாதையாய் அமைந்து காட்டில் வைகுதிர் காக்குவன் யானென்று ஆறுதல் மொழிகள் பலகூறி தான் தயரதன்பால் கொண்டுள்ள ஆறாத காதலின் அளவை வெளியிடுகின்றான்.

கழுகரசன் காவலில் கானகத்தே வீரர் வாழ்ந்து வருங்கால், அரக்கர் கோன் வஞ்சனையால் சீதையைக் கவர்ந்து, இலங்கை நோக்கிப் புறப்பட்டான். தன்னிலை யுணர்ந்த சீதை சோகமுற்றுப் புலம்புகின்றாள். தான் செல்லும் ஆகாய வீதிவழியே உதவி செய்ய வருவார் ஒருவரையும் காணாது,

"மலையே மரனே மயிலே குயிலே
கலையே பிணையே களிறே பிடியே
நிலையே உயிரே நிலைதே றினர்போய்
உலையா வலி யாருழை நீருரையீர்''

என்று மலையையும், மானையும், மயிலையும், குயிலையும், கலையையும், பிணையையும் கூவியழைத்து, அவைகளிடத்தெல்லாம் தனது துயரை அறிவிக்கின்றாள். இவள்தன் புலம்பலைக் கேட்ட கழுகரசன் அவ்விடம் விரைந்துவந்து சேர்கின்றான். தன் மருகிக்கு உற்ற துயரை உணர்கின்றான்.

"சஞ்சலங் கலந்தபோது தையலாரை உய்யவந்து
அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை யென்ன ஆண்மையே''

என்று எண்ணி அருந்துயரில் ஆழ்ந்த மங்கைக்கு அபயமளிக்கின்றான். அபயமளித்த அணங்கைக் காக்க அரக்கர்கோனுடன் போரேற்று நிற்கின்றான். அரக்கர்கோனாகிய இராவணனே பல படைக்கலங்களுடன் நிற்கின்றான். நம் கழுகரசனே தன் இறகையும் மூக்கையும் நகத்தையும் பல்லையுமே படையாகக்

கொண்டு போர் புரிகின்றான். இவ்விதம் இருந்தும் பறவை வேந்தன் அரக்கர்கோனது வீணைக் கொடியைப்பற்றி யொடித்தான். வில்லைப் பல்லால் பறித்தான். தடக்கைவில்லைத் தோளாலிறுத்தான். பன்மணித்தண்டு பறித்தெறிந்தான். இச்செயல்களைக் கண்ணுற்ற அரக்கர்கோனும் ஆற்றாத சீற்றங்கொண்டு ஓர் கூரிய வேற்படையை சுழற்றி யெறிந்தான். அவ்வேலும் வீரஞ்செறிந்த கழுகாசனின் இறகைத் துளைக்க வலியற்று,

"பொன் நோக்கியர் தம்புலன் நோக்கிய புன்கணோரும்
இன்னோக்கியரில் வழியெய்திய நல்விருந்தும்
தன்னோக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னோக்கியர் நோக்கமுமாமென மீண்டதவ்வேல்"

என்று அவ்வேல் மீண்ட தன்மையைக் கம்பர் எடுத்துக் கூறும் நயம் நலஞ்சான்றதாகும். வேசியர் நலத்தை விரும்பும் காசற்றவர் கருத்துப் போலும் தவஞ்செய்யுந் தன்மை வாய்ந்த மாதவர்பால் சென்ற மங்கையர் நோக்கம் போலும், இராவணன் விடுத்த வேல் கழுகாசன் இறகைத் துளைக்க வலியற்று மீண்டது என்று அழகொழுக எழுதி யமைக்கின்றார் கவியரசர். இவ்வாறு தன்படை வலியற்றுப் போனதைக் கண்ட வீரன் கடைசியாக ஈசன் அருளிய மந்திரவாளால் எருவை வேந்தனை எறிகின்றான். வலியுடைய வாளுக்கு ஆற்றாது கழுகாசன் மயங்கி வீழ்ந்தான். மன்னன் வீழ்ந்ததைக் கண்ட மங்கையும்,

"அல்லல் உற்றேனைவந்து அஞ்சல் என்ற இந்
நல்லவன் தோற்பதோ நரகன் வெல்வதோ
வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
இல்லையோ அறமென இரங்கி ஏங்கினள்"

என்று கவியரசர் கவியாற்றுகின்றார். இலங்கை வேந்தனது வலியறிந்தும் தன்னை அடைக்கலமென்றடைந்த சீதைக்கு அபயமளித்த காரணத்திற்காக அவனுடன் எதிர்த்துப் போர்செய்து வீரசுவர்க்கம் அடைந்த சடாயுவை இராம வீரனும் போற்றி மகிழ்கின்றான்.

"சரண் எனக்கு யார்கொல் என்று சானகியழுது சாம்ப
அரண் உனக்காவன் வஞ்சி அஞ்சல் என்று அருளின் ஓம்பி
முரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யமர் முடித்துத் தெய்வ
மரணம் என்தாதை பெற்றது என்வயின் வழக்கன்றாமோ"

என்று இராமன் தன்னை வந்தடைந்த வீடணனைத் தன் கூட்டத்தோடு சேர்த்துக்கொள்ளுதல் தகாது என்று பலர் சொல்லிய காலத்து எடுத்துக் காட்டும் ஒரு சிறந்த சான்றாக இப்பாகம் அமைந்துள்ளது. "தன்னுயிர் புகழ்க்குவிற்ற பெருமகன் சடாயு" என்று சொல்லின் செல்வனும் அனுமன் கூறுஞ் சொற்கள் கழுகாசன் வாழ்க்கையின் வளனை விளக்குவதாகும்.

ஏற்ற போரில் கழுகாசன் வெற்றி பெற்றிலன் எனும் கழுகின் காவலனை வென்ற பெருமை இராவணனுக்கு உரியதன்று என்பதே கம்பர்தங் கருத்தாகும். இமையாமுக்கண் ஈசனது வாளின் வலிமையாலன்றி பறவை யாசனை இலங்கை வேந்தன் வென்றிருத்தல் இயலாது என்பதை அப்போரைக் கண்ணால் கண்ட மங்கையே உணர்ந்து கூறுகின்றாள். கழுகாசனைத் தான் வென்றுவிட்டதாகச் செருக்கடைந்திருந்த இராவணனை நோக்கி,

"தோற்றனை பறவைக்கு அன்று துன்னும்சீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன்வாளால் வென்றாய் அன்றெனில் இறத்தியன்றே"

என்று இகழ்ந்து கூறும் மொழிகளில் கழுகாசனின் வீரம் கனிந்து விளங்கக் காணலாகும். இன்னும் படைக்கலமில்லாப் பறவையைத் தன் படைவலியால் கொன்ற ஒரு செயலும் அரக்கர்கோனுக்கு அமைந்த புகழாமா? ஒருகாலு மன்று. படைக்கலமில்லாத அந்நிலையிலும் கழுகாசன் படைக்கலத்துடன் போர் செய்த இலங்கை வேந்தனுக்கு ஒரு சிறிதும் இழைத்தானல்லன் என்பதும் ஈசன் அருளிய வாள்வலிக்காற்றாது உயிர் துறந்தனன் என்பதும் கவிஞர் கருத்தாக இலங்கக் காண்கின்றோம்.

கழுகாசன் தன் மக்கள்பால் கொண்ட காதலை அம் மக்களும் மறந்தவரல்லர். இலங்கை நகரிலே இந்திரசித்தனது படைவலியால் தம்பியும் ஏனைய வானர வீரர் அனைவரும் மயங்கிக் கிடந்ததைக் கண்ட இராமன்

"தாதையை இழந்தபின் சடாயு இற்றபின்
காதலின் துணைவரும் முடியக் காத்துழல்
கோதறு தம்பியும் விளியக் சோவிலன்
சீதையை உகந்துளன் என்பர் சீரியோர்

என்று கூறும் மொழிகளில் அப்பெருமகன் சடாயுவின்பால் வைத்திருந்த காதல் திறம் விளங்கக் காணலாகும். இன்னும் அம் மேகநாதன் மாய சீதையை வாளால் எறிந்து கொன்றான் என்பதை அறிந்த காலத்து,

"தாதைக்கும் சடாயுவான தந்தைக்கும் தமியளான
சீதைக்கும் கூற்றங்காட்டித் தவிர்ந்திலது ஒருவன் தீமை'

என்று மன்னவன் மைந்தன் மயங்கிக் கூறுகின்றான். தன் தாதைபால் வைத்த காதலையே இராமவீரன் இக் கழுகாசனிடமும் வைத்துள்ளான் என்பதைக் கவியரசர் அழகாக எடுத்தெடுத்துரைக்கின்றார். இராமன் கழுகாசன் பால் கொண்டுள்ள காதலின் தன்மையை இலக்குவனும் அறிந்துள்ளான் என்பதற்கும் ஒரு சான்றுண்டு.

அறநெறி நிலைநின்ற ஆரியர் கோனான இராமன் அமர் தொடங்குமுன் அங்கதனைத் தூது போக்க விரைகின்றான். அப்போழ்தத்து தூது அவசியமின்று என்று எடுத்துக் கூறப்போந்த இளைய வீரன் அரக்கர்கோன் செய்துள்ள அழிம்புகளை யெல்லாம் எடுத்துரைத்தும் அண்ணல் அரக்கன்பால் வைத்த இரக்கம் மாறாமை கண்டு கடைசியாக அரக்கர்கோன் சீதையை அவனிடமிருந்து பிரித்ததையும் அவனைக் காக்கப் போந்த பறவை வேந்தனைக் கொன்றதையும் எடுத்துக் கூறி உருக்கமாக இறைஞ்சுகின்றான்.

"வழியாய் நின்னையன்று வரம்பறு துயரின்வைகச்
சூழ்விலாமாயம் செய்துஉன்தேவியைப் பிரிவு சூழ்ந்தான்
ஏழைபால் இரக்கம்நோக்கி ஒருதனி இகல்மேற்சென்ற
ஊழிகாண்கிற்கும் வாழ்நாள் உந்தையைஉயிர் பண்டுண்டான்"

என்று இலக்குவன் இயம்புகின்றான். தன் மக்கள்பால் இறவாது அன்பு பூண்டொழுகிய கழுகாசனைப்போலவே இராமவீரனும் இளையகோவும் அவன்பால் மாறாத காதலுடையவர்களாய் விளங்குகின்றார்கள். தன்னுயிர் புகழ்க்கு விற்ற பெருமகனாய் இலங்கிய பெருமை கழுகின் காவலனான சடாயுவிற்கே உரியதாகும் என்று கூறுதல் மிகவும் பொருத்தமுடையதே யாகும்.




# விநாயகத்தின் சாமர்த்தியம்.



(யௌகந்தராயணன்.)

வெள்ளிக்கிழமை இரவு சுமார் 12 மணிபிருக்கலாம். சவடாலீஸ்வரர் கோவிலில் அர்த்த ஜாம பூஜை முடிந்து அரை மணி நேர மிருக்கும். சீதா விலாஸத்தின் மேல்மாடியில் மாத்திரம் ஒரு சிறு விளக்கு மின் மினுப்பூச்சிபோல் எரிந்துகொண்டிருந்தது. திடீரென்று "பளீர், பளீர்" என்று சப்தம் கேட்டது. உரத்த குரலில் அம்மாஞ்சி விநாயகம் அழ ஆரம்பித்தான். கீழே கூடத்தில் படுத்து உறங்கிக்கொண்டிருந்த பெண்மணியின் நித்திரையும் கலைந்தது.

"அப்பா, எப்பொழுதும் இந்த இழுவுதானா, அர்த்தராத்திரியில் வாசித்துக்கொண்டிருக்கும் குழந்தையை எதற்காக அடித்துக் கொல்லுகிறீர்கள்" என்று சுமார் 4, 5 வீடுகளுக்கு மட்டுமே கேட்கக்கூடிய தாழ்ந்த குரலில் தாடகையம்மாள் வினவினாள்.

"அம்மா பரதேவதை! உன் பிள்ளை வாசிக்கிறானா?-தெரியாது. அவன் வாயை இசிக்கும் லக்ஷணத்தை நீயே வந்துபார். வீட்டிலோ வரும்படியைக் காணோம். செலவோ தலைக்குமேலிருக்கிறது. உன் பிள்ளையோ கிரிஸ்னையில் எண்ணெய்க்குப் பிடித்த கேடாய் பத்திரிகைகள் படித்துக்கொண்டிருக்கிறான். போன வருஷம்தான் பரீக்ஷையில் சுழித்தாய்விட்டதே. இந்த வருஷமாவது ஒப்பேறணும் என்ற அக்கரையுண்டா? இந்தப் பிள்ளைக்கு சிபார்சு வேறே. இப்படிச் செல்லம் கொடுத்துத் தானே அவனைக் குட்டிச் சுவராக்கிவிட்டாய்" என்று சரமாரியாக வைச்வதேவ சாஸ்திரிகள் கர்ஜித்து விட்டுப் படுக்கச் சென்றார். விநாயகனும் விளக்கை அணைத்துவிட்டு படுக்கையில் படுத்துக் கொண்டே விம்மி விம்மி அழுதான். தாடகையம்மாளும், கும்பகர்ணனுக்கு உறவினளாதலால் ஸ்ரீரங்க மஹாத்மிய பாராயணத்தை ஆரம்பித்தாள்.

விநாயகத்திற்குப் பத்திரிகைப் பைத்தியம் அதிகம். சாஸ்திரிகள் பல சரக்கு சாமான் வாங்கிவந்தாலும் சரி, மிட்டாய்கள் வாங்கிக்கொண்டு வந்தாலும் சரி, முதலில் பொட்டலம் கட்ட உபயோகப்படுத்தப்பட்ட பத்திரிகையைப் படித்துவிட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பான். சாஸ்திரிகளுக்கோ பத்திரிகையென்றால் வயிறுபற்றி எரியும். காரணம் எனக்குத் தெரியாது. சிகப்புத் துணியைக் கண்டு காளை மிரளுவானேன்?

சனிக்கிழமை காலை 10—மணி. வேலை அதிகமாயிருந்ததால் சீக்கிரம் கோர்ட்டிற்குப் போகவேண்டுமென்று வக்கீல் வைச்வதேவ சாஸ்திரிகள் அவசரப்படுத்தினர். "இராத்திரி தூக்கமே கிடையாது. எனக்கு உடம்பே சரியாயில்லை. வேணுமானல் களப்பிற்குப் போங்கள்" என்று பணிவாக பதில் கூறிவிட்டு வழக்கத்தைக் காட்டிலும் அதிக தாமஸத்துடன் சமையல் செய்துகொண்டிருந்தாள் தாடகையம்மாள். "சரி, சரி, உன் களபாகமெல்லாம் இன்னொரு நாளைக்குப் பார்த்துக்கலாம். இப்பொ இலையைப் போடு. நாழியாய்விட்டது. எல்லாம் ஆனதுபோதும்" என்றார் சாஸ்திரிகள். "நாளைக்கு ஒரு சமையற்காரியைக் கல்யாணம் பண்ணிகொண்டுவந்தால் அவள் களபாகமோ கிளபாகமோ செய்துபோடுவாள். நான் என்ன பழைய காலத்துக் கர்நாடகம் தானே." என்று பதிலிறுத்தவாறே தாடகையம்மாள் இலையைப்போட்டுப் பரிமாறினுள். இவ்வாறு பலத்த வாக்குவாதத்திற்கிடையில் சாஸ்திரிகள் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தார்.

அவரது முகத்தில் கடுகு வெடித்தது. கோபத்தில் சட்டையை மாற்றிப் போட்டுக்கொண்டுவிட்டதையும் தலைப்பாகை தரிக்க மறந்துவிட்டதையுங்கூட கவனியாமல் வெகு அவசரமாக கோர்ட்டிற்குப் புறப்பட்டார். ஆனல் வெளித் திண்ணைக்கு வந்ததும், ஆ! அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டார். அங்கு விநாயகம் விளையாடிக்கொண்டிருந்ததைக் கண்டதும் அவருக்கு எரிகிற நெருப்பில் எண்ணெய்விட்டமாதிரி யாகிவிட்டது. அவன் பக்கத்தில் ஐந்தாறு எலிகள் அகப்பட்டுள்ள ஒரு பொறியும் நாலைந்து சமாசாரப் பத்திரிகைகளும் கிடந்தன.

"அடே! இதென்ன? நேற்று இராத்திரிதானே அடித்தேன். அதற்குள் எல்லாம் உதிர்த்துவிட்டாயே. இன்னமும் பத்திரிகைப் பைத்தியம் விடவில்லையா" என்று கூறிக்கொண்டே சாஸ்திரிகள் கையை ஓங்கினர். ஆனல் விநாயகம் என்ன இலேசான பேர்வழியா? இமைப் பொழுதில் எல்லாவற்றையும் சுருட்டிக்கொண்டு ஓடியே போய், வீட்டின் பின்புறத்தில் உள்ள மோட்டார் நிறுத்தப்படும் காரேஜில் ஒளிந்துகொண்டான்.

* * *

கோடை காலத்திற்காக கோர்ட்டுகள் மூடப்பட்டிருந்தன. சாஸ்திரிகள் திருக்குற்றாலத்தில் சுகமாக விடுமுறையைக் கழித்துக்கொண்டிருந்தார். அப்படியிருக்கும் பொழுது ஒருநாள் "மோட்டார் நாசமாகிவிட்டது. அவசரம்" என்று விநாயகத்தினிடமிருந்து அவருக்குத் தந்தி யொன்று கிடைத்தது. சாதாரணமாகத் தந்தி யென்றால் எல்லோரும் பதறுவார்கள். ஆனல் சாஸ்திரிகளுக்கு இந்தத் தந்தி கிடைத்ததும் ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவேயில்லை. சில காரணங்களை முன்னிட்டு அந்த மோட்டார் எப்பொழுது நாசமாய்ப் போகப்போகிற தென்றே அவர் காத்திருந்தார். நல்ல வேளையாக சீக்கிரமே அவரது மனோரதம் சித்தித்துவிட்டது.

வைச்வதேவ சாஸ்திரிகள் மோட்டார் வாங்கின கதை ஊர் முழுவதும் பிரசித்தம். சவடால் புரத்திற்கு நீங்கள் எப்பொழுதேனும் விஜயம் செய்தால் அந்த மஹாத்மியத்தைக் கேட்காமல் தப்பமுடியாது. இரண்டு வருஷங்களுக்கு முன்னல் ஹெட்மாஸ்டர் சுப்பையரிடமிருந்து 1857 மாடல் கிட்ரோன் காரை சாஸ்திரிகள் வாங்கினர். மோட்டாருக்காக சாஸ்திரிகள்

கொடுத்தது 150 ரூபாய். ஆனால் சுப்பையர் பெற்றுக்கொண்டது ரூபா 135 தான். நடுவில் 15 ரூபாய் பேரம் பேசிய வக்கீல் கிருஷ்ணசாமி ஐயங்கார் கையில் மறைந்துவிட்டதாக வதந்தி.

மோட்டாரை எப்படி புறப்படச் செய்வது, பிறகு அதை எப்படி ஓட்டிக்கொண்டு செல்வது, இந்த இரண்டு தொல்லைகளைத் தவிர மற்றப்படி சாஸ்திரிகளின் வண்டி முதல்தரமானது என்பதில் எவரும் சந்தேகிக்கவேண்டியதில்லை. ஓடும் வண்டியை நிறுத்துவதின் சிரமம் சென்னை மோட்டார் டிரைவர்களுக்குத்தான் தெரியும். திடீரென்று நிறுத்த முடியாமற்போவதால் தான் அனேகம் விபத்துகள் நேரிடுகின்றன என்பது நேயர்கள் அறிந்ததே. ஆனால் சாஸ்திரிகள் மோட்டாரை நிறுத்துவது சிரமமே கிடையாது. அனேகமாக அது தானாகவே நின்றுவிடும். இல்லாவிட்டால் ஒரு பர்லாங்கு தூரத்திலேயே 'பிரேக்' போட்டால் போதுமானது. இந்த மோட்டார் ஒரு தூதிருஷ்டம் பிடித்த கம்பெனியிடம் 1000 ரூபாய்க்கு எப்படியோ இன்ஷியூர் செய்யப்பட்டிருந்தது.

ஆகவே தந்தி கிடைத்தவுடன் சாஸ்திரிகள் கம்பெனித் தலைமை ஆபீசிற்கு இன்ஷியூரென்ஸ தொகையை சவடால்புரம் விலாஸத்திற்கே அனுப்புமாறு கடிதம் எழுதிவிட்டுத் தொலைந்துபோன காருக்காகத் தலை முழுகுவற்குச் சென்றார்.

விடுமுறை கழிந்ததும் நியாயஸ்தலங்கள் திறக்கப்பட்டன. ஆனால் வியாபார மந்தத்தாலும் செல்வ நெருக்கடியாலும் வேலை அதிகமாயில்லை. சவடால்புரம் வக்கீல்கள் பாடு பெரும் திண்டாட்டமாயிருந்தது. இவ்வாறு பணக் கஷ்டம் அதிகமாயிருந்த காலத்தில் சாஸ்திரிகளுக்கு 1000 ரூபாய் கிடைத்தது லக்ஷம் வராகன் கிடைத்ததுபோலிருந்தது. அவரது ஆனந்தப் பெருக்கு கரைகாணாது ஓடியது.

"அடே விநாயகம், நம் கார் எப்படித் தொலைந்தது?" என்று மத்தியான போஜனத்திற்குப் பிறகு நாற்காலியில் சாய்ந்த வண்ணம் தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்த சாஸ்திரிகள் கேட்டார்.

"அப்பா, இந்தக் காலத்தில் ஒருவருக்குமே நன்மை செய்யக்கூடாது. பணப்பையை மறந்துவிட்டுப்புறப்பட்ட எஜமானனை வழிமறித்து உயிரை யிழந்த நாயின் கதை மாதிரி......" என்று விநாயகம் பதில்கூற ஆரம்பித்தான்.

"விநாயகம், நான் என்னமோ கேட்டால் நீ என்னமோ உளறுகிறாயே?"

"இல்லை அப்பா, என்னால்தானே இந்த 1000 ரூபாய் கிடைத்தது. ஆனால் இதை வாங்கிக் கொடுத்ததற்கு எனக்குக் கிடைத்தது அடியும் உதையுந்தானே!"

சாஸ்திரிகளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

"அன்று எலிப்பொறியையும் பத்திரிகைகளையும் வைத்துக்கொண்டிருந்தபொழுது அடித்தாயே. அந்தப் பொறியும் பத்திரிகைகளுமில்லாவிட்டால் நான் எப்படி 1000 ரூபாய்க்கு வழிசெய்திருக்க முடியும்?"

இவ்வாறு கூறிவிட்டு விநாயகம் உள்ளேபோய் தன் புஸ்தக அலமாரியிலிருந்து ஒரு நோட்டை எடுத்துக்கொண்டுவந்து தகப்பனாரிடம் நீட்டினான்.

அதில் சென்னை "தினசரிப் புளுகன்" பத்திரிகையின் ஒரு பாகம் துண்டிக்கப்பட்டிருந்தது. அப்பாகத்தில் பின்வரும் செய்தி காணப்பட்டது.

"நைஸ் என்னுமிடத்திலிருந்த செய்தி யொன்று பின்வருமாறு கூறுகிறது. 'பஞ்சத்தால் உணவின்றி வருந்திய எலிகள் ஒரு காரேஜில் புகுந்து அங்கிருந்த மோட்டாரை பக்ஷித்துவிட்டன. இரும்பு பிரேம் மாத்திரம்தான் பாக்கியிருக்கிறது."

நைஸ் செய்தி சாஸ்திரிகளுக்கு வியப்பை யுண்டுபண்ணியது. அதைக் கண்டு தன் பிள்ளை செய்த நைஸ் வேலையை நினைத்தபோது அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சி யேற்பட்டது.

'அடியே, அம்பியின் சாமர்த்தியத்தைப் பார்த்தாயா! இவன் பத்திரிகை படிப்பதால் நமக்கு எவ்வளவோ லாபமுண்டு, எங்கே, அவனுக்கு ஒரு அணு கொடு "ஆனந்தன்" வாரப் பத்திரிகை வாங்கிக்கொள்ளட்டும்' என்று தாராளமாக ஆக்ஞாபித்துவிட்டு விநாயகத்தை நோக்கி, "நம் மாத்திலும் இரும்பு பிரேம் இருக்குமே அது எங்கே?" என்று கேட்டார்.

"பேரீச்சம் பழக்காரனிடம் போட்டுவிட்டேன்" என்று பதில் கிடைத்தது.

'சபாஷ்' என்று சாஸ்திரிகள் கூறிவிட்டு சந்தோஷ சாகரத்தில் மூழ்கினார்,

# விக்கிரகாராதனை.

('சூரபி' எழுதியது.)

## உலகம் பலவிதம்.

நான் இந்த வியாசத்தை எழுதத் தொடங்கியே யிருக்கமாட்டேன். இதிலடங்கிய விஷயமோ மிகவும் மேலானது. அதிலும் மதசம்பந்தமானது. மேலும் அனேக மேதாவிகளைப் பரதவிக்கச் செய்தது. இப்படிப்பட்ட விஷயத்தில் தலையிடுவானேன்? விஷயம் மிகவும் கடினமாகவிருந்தபோதிலும், மத ஆசிரியர்களையெல்லாம் கைக்கெட்டாமல் துன்புறுத்தியதாக விருந்தபோதிலும் அதைப்பற்றி பேசுவதற்குமட்டும் எல்லோருக்கும் இடங்கொடுக்கிறது. அதிகம் படிக்காதவர்களும், தேர்ச்சியடைந்தவர்களும், விஷயத்தைப் பூராவாக அறியாதவர்களும் இதைப்பற்றி நினைத்தபடி பேசவாரம்பிக்கிறார்கள். அவர்கள் கூற்று கவனிக்கத்தக்கதல்லவாயினும் தகுந்த சமாதானம் கூறாவிடின் உண்மை வெளிப்படாதென்று தோன்றுகிறபடியால் கடவுள் அனுக்கிரகத்தை முன்னிட்டு, பெரியாரின் அனுமதியை எதிர்பார்த்து, நல்லோரின் வழியைப் பின்பற்றி இவ்விஷயத்தைப்பற்றி என் கருத்தை வெளியிட விரும்புகிறேன்.

தலையங்கம் ஒரே விஷயத்தைக் குறிப்பிட்டாலும் அதையொட்டிய அனேக விஷயங்களைப்பற்றியும் கூற சந்தர்ப்பம் வாய்க்கும் என்பதால் வியாசம் சற்று பெரிதாகவும் ஒரே கட்டுரையில் அடங்காததாகவும் இருக்கும். நான் கூறப்போகும் விஷயங்கள் அனேகர் கொள்கைகளுக்கு மாறுதலாக விருப்பினும் அவைகளைப் பொருட்படுத்தாது பொறுமையுடன் இவைகளை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

(1)

அளவிறந்த ஆன்மாக்கள் அடங்கிய இப்பூவுலகில் எல்லோருக்கும் ஏற்றதாக விருக்கும் ஒரு விஷயத்தைக் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம். சாதாரணமாக 'பணமென்றால் பிணமும் வாயைத் திறக்கும்' என்ற பழமொழிப்படி திரவியம் எல்லோருக்கும் வேண்டியிருக்கிறது. ஆங்கிலத்தில் 'பணம் பத்தும் செய்யும்' என்று ஒரு வசனம் வழங்குகிறது. 'பணமில்லார்க்கு இவ்வுலகமில்லை, அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை' என்ற தமிழ்மொழியும் அதையே கூறுகிறது. ஆனால் பணம் வேண்டாதவர்கள் உலகத்தில் இல்லையா? முற்றும் துறந்த முனிவர்களும் செல்வத்தில் பற்றை நீக்கவில்லை. நாம் ஒவ்வொருவரும் ஒரு சமயம் இல்லாவிடில் இன்னொரு சமயம் பணத்தை வெறுக்கிறோம். பொதுவாக, பணத்தில் படுத்து புரளுகிறவர்களும் 'இன்னும் பணம் வராதா', 'அதிக லாபம் வரவில்லையே' 'இதைச் செய்திருந்தால் இரண்டத்தனை வரும்படி ஏற்பட்டிருக்கும்' என்ற விதமாக ஏங்குகின்றனர். ஆனால்

அதே மனிதர், வெய்யில் அதிகம் காயும் நாளொன்றில் ஏதோ விஷயமாகப் பல விடங்களில் சுற்றி வீட்டிற்கு வெகுதூரத்திலிருக்கும் சமயத்தில் தாகத்தைத் தணிக்க குளிர்ந்த ஜலத்திற்கும், வயிற்றுப் பசியைப் போக்கும் உணவிற்கும் அலைவார்களேயன்றி 'காசுவேண்டும்' என்ற ஆசையை மறந்தேபோயிருப் பர். தெருவில் அலையும் எத்தனையோ பிச்சைக்காரர்கள் காசு கொடுக்கப் போனால் வேண்டாமென்று மறுத்து, 'உங்கள் குழந்தை கட்டிக் கிழித்த கந்தை' கொடுங்கள் என்று யாசிக்கவில்லையா? மிகவும் அந்தஸ்து மிக்கவர்க ளாயினும் ஒவ்வொரு சமயம் அதிக பணம் செலவுசெய்யத் தயாராக விருந்த போதிலும் வேலைசெய்ய ஆள் அகப்படாமல் வருந்துகின்றனர். ஆகவே 'எண்சாண் உடம்பிற்குப் பணமே பிரதானம்' என்னும் கற்பனை மொழி மூற் றும் உண்மையல்ல. முக்கியமாகக் குழந்தைகள், பள்ளிப் பிள்ளைகள், அதிக செல்வந்தர்கள் முதலியவர்களுக்குப் பணத்தின் அருமை தெரியாது. சில தினங்களுக்கு முன் ஒரு சிறு குழந்தை நூறு ரூபாய் நோட்டு ஒன்றை நெருப் பில் எறிந்துவிட்டதாகப் பத்திரிகைகளில் படித்தோம். நமது கண்ணுக்குப் பணமாகத் தோன்றுவதும் அதிக மதிப்பு வாய்ந்ததுமான ஒரு வஸ்து குழந் தைக்கு விளையாட்டுக் கருவியாகத் தோன்றுகிறது. பள்ளிப் பிள்ளைகள் தங் கள் தகப்பன்மார் பாடுபட்டு ஈட்டும் பொருளை மதியாமல் 'ஸைகில் வேண் டும்,' 'புதிய உடை வேண்டும்', 'விளையாட்டுக் கருவி (பந்தாடுவதற்கு பாட்.....) வேண்டும்' என்றவாறு தங்கள் குடும்ப அந்தஸ்திற்கு தகுந்ததல்லாத பல பொருள்கள்மேல் ஆசைவைத்து, 'பணம் போனால் என்ன பிரமாதம்? நாளையே சம்பாதித்துக்கொள்ளலாம்' என்ற வியாக்கியானம் படிக்கின்றனர். அனேக மக்கள் ஒருவேளை கஞ்சியும் குடிக்க வகையற்று எங்கேயாகிலும் ஒரு அணு அகப்பட்டால் அன்று நரிமுகத்தில் விழித்தாற்போல் எண்ணங் கொண்டு களிக்கிறார்கள். ஆனால் தனவந்தர்களோ சற்றும் விசனமடையா மல் ஓரிரவு நாடகத்திற்கோ, அல்லது வேறுவிதமான பொழுதுபோக்குக்கோ, ஆளுக்கு ஐந்து ரூபாய் செலவு செய்துகொண்டு குடும்பத்திலிருக்கும் மொத்த பேரும் பார்த்துவிட்டு வருகிறார்கள்.

இவ்வுலகத்தின் விஷயங்கள் அனேகமாக இப்படித்தான் இருக்கின்றன. எல்லோருக்கும் பிரியமுள்ளதாகவும், சந்தோஷத்தையோ வருத்தத்தையோ கொடுக்கக்கூடியதாகவும், ஏககாலத்தில் தைரியத்தையோ அதைரியத்தையோ விளைவிப்பதுமானது ஒன்றுமேயில்லை. நாய் வீட்டில் ஏறுவதைக் கண்டால் ஒருவர், 'இது ஏதடா, சனியன்மாதிரி வருகிறது. சிவ, சிவா! ஓட்டடா சீக் கிரம்' என்கிறார். மற்றொருவர் தான் அருமையாய் வளர்த்துவந்த நாய் திடீ ரென்று இறந்துவிட்டதென்று அன்னம், பானம் முதலியன நீக்கி வருத்தம் மேற்கொள்ளுகிறார். குதிரைப் பந்தயத்திற்கு சென்ற இருவரில் ஒருவர், 'அப்பா, என்ன அதிர்ஷ்டம் பத்து ரூபாய் கட்டினேன், ஐந்நூறு ரூபாய் வந் தது' என்று நகை முகத்துடன் திரும்புகிறார். மற்றொருவர், 'ஐயோ, பணம் அகப்படாமல் திண்டாடி கஷ்டப்பட்டு சேர்த்த ஐந்து ரூபாயை அந்தப் பாவி பேச்சைக் கேட்டு இதில் கட்டினேன். அதுவும் போய்விட்டதே' என்று வருந்திக்கொண்டு வீடு செல்கிறார். உயர்ந்த பதவியில் இருந்த ஒருவர் திடீ ரென்று இறந்துவிடுகிறார். அவர் வீட்டிலுள்ளோரும் அவரை நம்பியிருந்த வரும் கண்ணீரும் கம்பலையுமாக நிற்கின்றனர். ஆனால் அவருக்கு அடுத்தபடி யாயிருந்த உத்தியோகஸ்தர் ஒப்புக்கு துக்கம் விசாரித்தாலும் உண்மையில்

ஆனந்தமடைகிறார். ஏனெனில் இறந்துவிட்டவர் பதவிக்கு இவ்வாறு நியமிப்பார்கள். 'ஒருவருடைய உணவு இன்னொருவருக்கு விஷம்' என்றபடி ஒருவருக்கு இஷ்டமானது இன்னொருவருக்கு வேம்பாக விருக்கிறது. ஒருவர் மலைமேலிருந்து விழுந்துவிட்டால் அவர் தேகம் வலிக்கிறது, அல்லது பிராணன் போகிறது. ஆனால் உயிர் இருக்கும் வரையில் வைத்தியரும், இறந்துவிட்டால் கிரியைகள் செய்பவரும், ஆஸ்திக்கு வார்ஸுகாரர்களும் சந்தோஷப்படுகிறார்கள். சமுத்திரக்கரையில் செம்படவர்கள் மீன் பிடித்துக்கொண்டுவந்து கரையில் சேர்த்தவுடன் அனேகர் அவர்களைச் சுற்றி நின்று விலை கேட்டு வாங்க உத்தேசிக்கின்றனர். மற்றும் சிலர் அதன் மணத்தைப் பொறுக்கமாட்டாதவராய் விலகிப் போகின்றனர்.

நன்மை அல்லது தீமை என்பதும், நியாயம் அல்லது அநியாயம் என்பதும் எல்லோருக்கும் பொதுவாக விருப்பதில்லை. திருடுவது நியாயமா, அனியாயமா? சாத்மீகர்களும் சட்ட ஆசிரியர்களும் மிகவும் அனியாயம் என்றே கூறுவர். ஆனால் வயிற்றுக் கொடுமையினால் வருந்தும் ஏழைத் திருடன் தன் உயிர் பட்டினியால் நீங்குவதைக் காட்டிலும் திருட்டுக் குற்றத்திற்காகத் தன் தேகம் சிறைக்குச் செல்வதே மேல் என்று கருதுகிறான். சுருட்டு முதலிய வஸ்துக்கள் உபயோகிப்பது நன்மையா, தீமையா? அவ்வஸ்துக்கள் அருகிலும் செல்லாத மனிதர் ஒருவர் "அது அதிக கெடுதல் செய்யும் என்பது யாவரும் அறிந்ததே" என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளும் விஷயம்போல் எடுத்துக் கூறுகிறார். ஆனால் பீடி கடைக்காரரைக் கேளுங்கள். "ஈ. டி-பீடி' உயர்ந்தது", "எல்லோரும் சைகல் பீடியையே உபயோகியுங்கள்" என்ற விளம்பரங்களை பிரசுரிக்கிறார். காபி குடி—அதிக கெடுதல் என்று ஒருவர் கூறுகிறார். மற்றொரு வைத்தியர் ஒரு பொடியைக் கொடுத்து, "காபி பருகு முன் இதைப் போட்டுக்கொள்ளுங்கள்" என்கிறார். ஒற்றைப் பார்ப்பான் எதிரில் வருவது—எனக்குத் தெரிந்த ஒருவர் இம்மாதிரி அபசகுனம் நேர்ந்தால் உடனே ஓட்டோடியும் வீட்டிற்குச் சென்று ஐந்து நிமிஷங்கள் சென்றதும் தான் திரும்புவர். இவர் அபிப்பிராயத்தில் அவ்விஷயம் தீமையாகப்படுகிறது. ஆனால் நாகரிக முதிர்ச்சியடைந்த ஒருவர் அதைச் சற்றும் பொருட்படுத்துவதில்லை. கறிகாய்களைப் பாதி வேகவைத்துத் தின்பது—வைடமின் நம்பகம் மிகுந்த ஒருவருக்கு நன்மையாகப் படுகிறது. நம்மைப்போன்ற (என்னைப்போன்ற) கர்நாடக மனிதனுக்கு அவ்விதம் உண்பது வயிற்றுக்குக் கெடுதல் என்று தோன்றுகிறது. பால்ய விவாகம்—சனாதன தர்மக்காரருக்கு மிகவும் சிலாக்கியமாகத் தோன்றுகிறது. ஆனால் "ஸோஷல் ரிபார்ம்" காரருக்கு அது மிகவும் கெடுதலாகப்படுகிறது. இவ்வளவு கூறியதற்குமேல் இன்னும் ஒரு உதாரணம் மிகையாகாதெனக் கருதுகிறேன். ஸ்வயராஜ்யம் அடைய முயல்வது நியாயம் என்று ஒரு கக்ஷிக்காரருக்குத் தோன்றுகிறது. ஆனால் மற்றொரு கக்ஷியாருக்கு கடவுளால் ஏற்படுத்தப்பட்ட அரசாங்கத்தை எதிர்க்க முயல்வது மதியீனம் என்று படுகிறது.

இதுபற்றியே ஆங்கிலக்கவி மில்டனும், "நன்மை என்றும் தீமை என்றும் இரண்டு விஷயங்கள் இல்லை. எல்லாம் நம்முடைய யோசனை ஏற்படுத்திக்கொள்வதே" என்றார். ஆதலால் ஒவ்வொருவருடைய யோசனையின்படியும் அவருடைய அபிப்பிராயத்தின்படியுமே எல்லா விஷயங்களும் தோன்றுமேயன்றி ராமனுக்குத் தோன்றுவதே கிருஷ்ணனுக்கும் தோன்றவேண்டும்

என்றால் அது சாத்தியமா? உதாரணமாக, ராமனும் கிருஷ்ணனும் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் என்று வைத்துக்கொள்வோம். இருவரும் ஒரே பரீக்ஷைக்குப் போகிறார்கள். ராமன் நன்றாகப் படித்திருக்கிறான். கிருஷ்ணன் இயற்கை சோம்பேறித்தனத்தினாலும் சௌகரியக் குறைவினாலும், நன்றாகப் படிக்கவில்லை. கேள்விக் கடிதங்களைப் பார்த்தவுடன் ராமன் 'பரீக்ஷை வெகு சுலபம்' என்று அபிப்பிராயப்படுகிறான். கிருஷ்ணன் 'அதைப்போன்ற கடின பரீக்ஷை அதுவரையில் பார்த்ததில்லை' என்கிறான். ஏன் அப்படி மாறுபாடு என்று கேட்டல் உசிதமாகுமா?

சாதாரணமாக மனிதர்கள் வெவ்வேறு விதமாக அபிப்பிராயப்படுவதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலாவது சீதோஷ்ணஸ்திதி. இது ஒரு தேச முழுமைக்கும் அனேகமாகப் பொதுவாக விருப்பதால் (இந்தியாவைப் போன்ற கண்டத்தைப்பற்றி நாம் கூறவில்லை) அத்தேசத்திலுள்ளோருக்கெல்லாம் ஒரே அபிப்பிராயம் சில விஷயங்களில் ஏற்படுகிறது. குளிர்மிகுந்த இங்கிலாந்து முதலிய தேசத்தவர்கள் எப்போதும், எந்நாட்டிலிருந்தபோதும் சட்டைகள் அணிந்துகொண்டிருக்கவேண்டும் என்று அபிப்பிராயப்படுகின்றனர். நமது நாட்டைப்போல் உஷ்ணப்பிரதேசத்தில் எவ்வளவு குறைவாக ஆடைகளிருக்கின்றனவோ அவ்வளவும் நலம் என்கிறோம். சிலர் இதைப் பழக்கம் என்பர். ஆனால் நான் கூறுகிறபடி ஒவ்வொரு பழக்கமும், வழக்கமும் அபிப்பிராயத்திலிருந்து ஏற்படுகிறது. காலையில் உண்ணுமுன் ஏன் ஒருவன் ஸ்நானம் செய்கிறான். அவன் மனதிற்கு அனேக நாட்கள் போஜனத்திற்கு முன் ஸ்நானம் ஆகவேண்டுமென்று தோன்றி அதுவே பழக்கமாக மாறுகிறது. கெட்ட வழிகளிலெல்லாம் செல்லாத ஒருவர் திடீரென்று ஏன் பொடி போடும் வழக்கத்தைக் கைப்பற்றுகிறார்? முதல்முறை இன்னொருவர் அவ்விதம் செய்யச்சொல்லி கையில் பொடியைக் கொடுத்திருப்பார். அவருடைய மொழி இவர் மனதிற்குப் பிடித்தமாகத் தோன்றியிருக்கும். ஒரு முறை போட்டவுடன் தனக்கு அதன் ருசி தோன்றுகிறது. வழக்கமாகக் கொண்டுவிடுகிறார். ஆகவே ஒவ்வொரு பழக்கத்திற் கடியிலும் அபிப்பிராயம் நின்றுகொண்டிருக்கிறது. சீனக்காரர்கள் கரப்பான் பூச்சியைப் பிடித்துத் தின்கிறார்கள். அதற்கும் சீதோஷ்ண ஸ்திதியே காரணமாக விருக்கலாம்.

இரண்டாவதாக, சகவாசம், ஒருவர் எத்தகைய ஜனங்கள் மத்தியில் வசிக்கிறாரோ அவர்களுடைய எண்ணங்கள் இவருக்கும் பதிந்துபோகின்றன. ஆபீஸ் விட்டதும் நேரே வீடுவந்து சேர்ந்து வேறு எங்கும் செல்லாத மனிதரும் சேர்க்கையினால் மாலை வேளையில் கடற்கரை, படக்காட்சி முதலிய விடங்களுக்குப் போய் காலங்கழிக்க இச்சிக்கிறார். பாட்டு என்றால் காதை மூடிக்கொண்டு அப்புறம் செல்லும் மனிதரும் பாடகர்களின் மத்தியில் வசித்தலால் அதன் மேன்மையை அறிந்துகொண்டு அதனிடம் அபிமானம் வைப்பார்.

மூன்றாவதாக, பரம்பரையாகத் தச்சவேலை செய்யும் ஒருவனைப் பார்த்து, "ஏன் இதே வேலை செய்கிறாய்" என்றால் அவன் தன் பிதா, பாட்டன் முதலியோர் செய்த தொழில் அதுவேயாதலால் அதை விட்டுவிட மனமில்லை என்கிறான். சில தினங்களுக்குமுன் குடுகுடுப்பையாண்டி ஒருவனைப் பார்த்து, "ஏனப்பா இம்மாதிரி அலையவேண்டும். நாள் முழுவதும் கத்தியும் உனக்குப் போதுமான உணவு அகப்படாமல் தவிக்கிறாயே. உனக்கோ கடவுள் நல்ல தேகத்தைக் கொடுத்திருக்கிறார். கஷ்டப்பட்டு வேலை செய்யக்

கூடாதா" என்றதற்கு, "இது (பிச்சை எடுப்பது?) எங்கள் முன்னோர்கள் செய்த தொழில். இதை எப்படி விடலாம்"? என்றான்.

இன்னும் அனேக காரணங்கள் இருப்பினும் அவைகளைத் தொடா மனமில்லை. முக்கியமாக, ஜனங்கள் அனேக முகாந்தரங்களினால் வேறுபல அபிப்பிராயங்கள் கொண்டிருக்கின்றனர். சாதாரணமான விஷயங்களிலே, எல்லோருக்கும் நன்றாகப் புலப்படும் விஷயங்களிலே, 'ஒன்று தப்பு, மற்றொன்று சரி' என்று ரூபிக்கக்கூடிய விஷயங்களிலேயே அவர்கள் எண்ணங்கள் பலவாறாக விருப்பது நியாயம் என்று இவ்வளவு நேரம் வாதாடியதிலிருந்து ஏற்படுவதால், ஒருவரும் முன்பின் அறியாத, அறியக்கூடாத, அறியப்போகாத தெய்வீக விஷயத்தில் அநேகவித எண்ணங்கள் தோன்றுவது ஆச்சரியமாகுமோ? ஒருவரும் சரியாகக் கண்டறியாத விஷயத்தைத் தவறு என்றும் அநியாயம் என்றும் கண்டித்தல் பொருந்துமோ? (தொடரும்.)

## கிறிஸ்து சமயம் ஏன் பரவுகிறது?



சென்ற மாதம் இந்து சமயம் ஏன் க்ஷீணிக்கிறது என்பதை விளக்கிக் காட்டினோம். நமது கோவில் குருக்கள்மாரால் தடிகொண்டு தாக்கி வெருட்டப்பட்ட தாழ்த்தப்பட்ட சகோதரரைக் கிறிஸ்தவ பாதிரியார் உருக்கமுடன் வரவேற்கும் காட்சியை நோக்குங்கள்.



# உலக அநுபவம்

(கி. பாலசுப்பிமணியம், M. A.)

ஒவ்வொரு வஸ்துவைக் காணும்போதும் நமக்கு ஒருவித அனுபவம் உண்டாகிறது. ஒன்றைக் காணும்போது அருவருப்பு, ஒன்றைக் காணும்போது சந்தோஷம், ஒன்றைக் காணும்போது பயம், ஒன்றைக் காணும்போது ஆச்சரியம், இன்னொன்றைப் பார்க்கும்போது கோபம் இப்படியாகப் பலவிதமான அனுபவங்கள் உண்டாகின்றன. இவவளவு நாகரிகம் முதிர்ந்த காலத்தில் இவ்வாறிருப்பின் ஆதிகாலத்தில் அனுபவம் குறைந்திருந்தபோது இவை பன்மடங்காகத் தோன்றியிருக்கவேண்டு மல்லவா?

மலைகளும், ஆறுகளும், சுனைகளும், கடல்களும், அழகான பூஞ்சோலைகளும் மனிதர் மனத்தில் ஒவ்வோர் எண்ணத்தைக் கிளப்பாமலிருக்க முடியாதல்லவா? மலையைப் பார்த்தால் பயமுண்டாகிறது. அதற்குள் எத்தனை குகைகள்? இக்குகைகளில் எத்தனை துஷ்டமிருகங்கள்? இம்மரங்களில் என்னவிதமான பூதங்களிருக்கின்றனவோ? இக்கடலில் என்ன இரைச்சல்? என்று இவ்வாறெல்லாம் தோன்றியிருக்கவேண்டும்.

இப்போது எந்த பொருளுக்கும் உயிருண்டென்றே சொல்லவேண்டும். உயிரில்லாவிட்டால் அது அசையமுடியாது. கல்லிற்கு உயிரில்லை யென்றால் என்ன அர்த்தம்? அது போட்ட இடத்தில் இருக்கிறது. ஒருவர் எடுத்தெறிந்தால்தான் அசையும் மரங்கள் வளர்கின்றன. அவைகளுக்கு உயிருக்கவேண்டும், மலைகள எவ்வளவு பராக்கிரம முள்ளவைகளாகத் தோன்றுகின்றன? ஆகவே அவைகளுக்கும் உயிருண்டு, ஆறுகள் ஓடுகின்றன, ஆகவே அவைகளுக்கும் உயிருண்டு. வானத்தில் மின்னலும் இடியும் தோன்றுகின்றன. இவைகளுக்கும் உயிருண்டு. இம்மாதிரி ஒவ்வொரு இயற்கைத் தோற்றமும் உயிருள்ளதென்றே அக்காலத்தில் தோன்றியிருக்கவேண்டும். சில நாட்களுக்கு முன்பு ரெயில் வண்டியில் நான் போய்க்கொண்டிருந்தபோது, வண்டி ஒரு ஸ்டேஷனில் நின்றபோது ஒரு குழந்தை "ஏன் வண்டி நின்றுவிட்டது? கால்வலிக்கிறதா?" என்று கேட்டது. குழந்தை யென்பது அனுபவமற்றது என்றர்த்தம். அக்காலத்துப் பெரிய குழந்தைகளும் அனுபவமில்லாததால் தமக்குத் தோன்றியவற்றிற்கு உயிரைக் கொடுத்துவிட்டனர். இதனாலேயே கங்காதேவி, கோதாவரிதேவி, கிருஷ்ணாதேவி, சமுத்திர ராஜன், வருணன், இந்திரன், கிரிராஜன் என்று பலவிதமான தேவதைகள் தோன்றிவிட்டனர். உயிருள்ளவையா யிருந்தால் மனிதரைப்போலவே அங்க அடையாளங்கள் உள்ளவைகளாயிருக்கவேண்டுமல்லவா? ஆனால் மனிதருக்கு அனேக காரியங்கள் கைகூடாமலிருக்கின்றன. ஆனால் தேவதைகளுக்கு அவைகள் சாத்தியமாயிருக்கவேண்டும். அவர்களுக்குச் சக்தி அதிகம். மனிதரை ஆட்டிவைக்கும் சக்தியும் உண்டு.

சில துஷ்ட மிருகங்களிருக்கின்றனவே? அவைகளும் மனிதனுக்கு இன்னல்கள் உண்டாக்குகின்றன. ஆறுகள் பெருக்கெடுத்துப் பயிர்களைப் பாழாக்கின்றன. மிருகங்கள் மனிதனைக் கொல்கின்றன. சமுத்திரங்கள் மனிதனை முழுக்கிவிடுகின்றன. மலைகளில் சில ஆடுகள் காணமற் போகின்றன. இவைகளெல்லாம் துஷ்ட சுபாவமுள்ளன. துஷ்டனைக் கண்டால் எல்லோருக்கும் பயமே. இவற்றிற்கு ஏதேனும் சாந்தி செய்தாலொழிய மனிதனைச் சும்மாவிடாது. சரி, இவைகளைத் தெய்வமாக்கித் தொழுவோம் என்று மனிதன் தனக்குள் யோசித்திருக்கவேண்டும். யானையைத் தொழ ஆரம்பித்தான் சிங்கத்தைத் தொழவாரம்பித்தான், மலைகளைத் தொழ ஆரம்பித்தான், ஆறுகளைத் தொழ ஆரம்பித்தான், பூமி, அக்னி, ஆகாயம் இவ்ற்றையும் பூஜித்தான். இவைகளுக்கு மாதந்தோறும், வருஷந்தோறும் பூஜைகள் செய்துவந்தான். இவைகளைத் தொழுவதற்குச் சிறு கோவில்களைக் கட்டியும்வைத்தான்.

நிற்க, ஒரு மனிதன் இறந்துவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். "என்ன! நம்முடன் ஓடியாடித் திரிந்து, உண்டு உடுத்துவந்த ஒருவன் திடீரென்று கீழே விழுந்து, எழுந்திருக்கவில்லையென்றால் என்ன ஆச்சரியம்? இது புதிய அனுபவமாயிருக்கிறதே" என்று யோசித்திருப்பான். இம்மனிதனுடைய தேகம் இங்கேயிருக்கிறது. ஆனால் நம்மைப்போல் ஏன் ஓடமுடியவில்லை? ஆ! இப்போது தெரிந்தது! மனிதனுடைய தேகத்தை யாட்டிவைப்பதற்கு ஒரு சக்தியிருக்கவேண்டும். இந்தச் சக்தி அவனிடம் இல்லாவிட்டால் அவன் எதுவும் செய்யமுடியாது. இச்சக்தி அவனைப் பிரிந்துவிட்டால் அவன் இறக்கிறான்போலும்! சரி, இச்சக்தி எது? நமது கண்ணிலிருக்கும் மணியா? இருக்கலாம். ஏனெனில் இறந்தவன் கண்கள் மூடிக்கொண்டன—அதாவது—மணிகள் கிளம்பிவிட்டன வென்று சொல்லாம். அல்லது இச்சக்தி மூச்சுக்காற்று என்று சொல்லலாம். கீழே விழுந்தவுடன் இம்மூச்சுக்காற்று நின்றுவிடுகிறது. அல்லது இச்சக்தி மனிதனுடைய சாயலாயிருக்கலாம். அது சதா மனிதனுடன் போய்க்கொண்டேயிருக்கிறது. கீழே விழுந்துவிட்டால் மறைந்துபோகிறது. ஒவ்வொரு தேசத்தின் புராணங்களிலும் பிராண, ஆத்மா, சாயல், மூச்சுக்காற்று, கண் மணி இவற்றை ஒரே பொருளுடையனவாய்க் கூறப்பட்டிருக்கிறதென நிபுணர்கள் ஆராய்ச்சி மூலமாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

இப்போது இறந்தவனுடைய பிராணன், எதுவாயிருந்தாலும், எங்குப் போயிருக்கக்கூடும்? இரவு தூங்கும்போது கனவுகளில் இறந்தோரைக் காண்பது சகஜம். நாம் ஒரு விஷயத்தைப்பற்றியே அதிகமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தால் கனவில் அதைப்பற்றி ஏதேனும் தோன்றுவது அனுபவம். இறந்தோர் கனவில் தோன்றியவுடன், "இது ஒரு புதிய உலகம்போலிருக்கிறது. இறந்தோருடைய ஆத்மாக்கள் வசிக்கும் உலகம்போலும். அவ்வுலகத்தில் நம்முடைய ஆத்மா போனாலொழிய இறந்தோருடைய ஆத்மாக்களுடன் எப்படிச் சம்பாஷிப்பது? ஆகையால் நாம் தூங்கும்போது நம்முடைய தேகம் படுத்த விடத்திலிருந்தாலும், நம்முடைய ஆத்மா திரிகிறது" என்ற முடிவுக்கு வருவது இயற்கை.

ஆத்மாக்கள் வேறு உலகில் வசித்து வந்தால் அவைகளுக்கு ஆகாராதிகள் யார் கொடுப்பார்கள்? அவ்வுலகில் வேட்டையாடி உணவு சம்பாதிக்கக் கூடுமோ என்னவோ? எதற்கும் நாம் அவர்களுக்கு வேண்டிய உணவைக்

கொடுத்துவிடுவோம் என்று வருஷத்தில் ஒருதினம் இறந்தோரைக் குறித்து திவசம் படைத்தல் ஏற்பட்டது. சில தேசங்களில், சில திறத்தாரில் மனிதன் இறந்து புதைக்கும்போது அவனுடைய விண்ணுலகப் பிரயாணத்திற்கு வேண்டிய சம்பாரங்கள் அடக்கம்செய்து வருகிறார்கள். இறந்தோர் தெய்வங்கள் என்னும் அபிப்பிராயம் உண்டாவது சகஜமே.

ஒரு கிராமத்தை எடுத்துக்கொள்வோம். அதில் அனேக மனிதர்களிருக்கிறார்கள். இருந்தாலும் அதில் எத்தனைபேர் தலைவராக இருப்பதற்கு யோக்கியதை யுள்ளவர்கள்? ஒருவனிருப்பதும் துர்லபந்தான். அப்படியொருவன் இருந்தாலும் அவனிடங் கீழ்ப்படிந் திருப்பதற்கு மற்றோர் சம்மதிப்பது கஷ்டம். ஒவ்வொரு மனிதனுக்கும் தான் தலைவனாக இருக்கவேண்டுமென்ற ஆசையிருக்கிறது. இன்னொருவன் தலைவனென்றால் பொறாமை. ஆகவே எல்லோருக்கும் விருப்பமுள்ளவனா யிருந்தால் அவனே அப்பதவிக்குகந்தவன். ஆதிகாலத்திலிருந்த அரசர்களெல்லோரும் சண்டையிலோ, சூழ்ச்சியிலோ மற்றவர்களை விடக் கெட்டிக்காரராகவிருந்ததால் தேர்ந்தெடுக்கப்பட்டதாகப் புராணங்களில் கூறப்படுகிறது. இவ்வீரர்கள் தம்முடைய பராக்கிரமத்தால் எல்லோரையும் அடக்கிவந்தனர். நமது தேசத்தில் புராண அரசர்கள் திக்விஜயஞ் சென்று மற்ற அரசர்களை யடக்கிவந்ததாகப் படிக்கிறோம். இவ்வரசர்களிடத்தில் குடிகளுக்கு அன்பு, பக்தி, பயம் முதலியன உண்டாவது இயற்கையே. ரகு வம்சத்தில் திலீபனிடத்தில் வேலைக்காரர்கள் நெருங்கியும் நெருங்காமலும் ஆதரவுடனும் பயத்துடனும் பழகியதாகப் படிக்கிறோம். எப்படி சமுத்திரத்திலுள்ள ரத்னங்களால் வசீகரிக்கப்பட்டும், துஷ்ட ஜல ஜந்துக்களால் பயமுறுத்தப்பட்டும் ஜனங்கள் அதை நெருங்கியும் நெருங்காமலுமிருக்கிறார்களோ அப்படி இவ்வரசனிடம் நடந்துகொண்டார்களாம்! இக்காலத்தில் கோவில் தர்மகர்த்தா, மணியகாரர் முதலியோர் வீடுகளைத் தாண்டிச் செல்லும்போது கோவில் வேலைக்காரரான மேளக்காரர் முதலியோர் வீட்டிற்கு ஒரு கும்பிடுபோடுவதைப் பார்க்கிறோம் அவ்வளவு மரியாதைபோலும்! இக்காலத்திலும் அரசரைக் கண்டால் அனேகருக்கு ஓர் உற்சாகம். ராஜதரிசனம் என்பது தெய்வதரிசனத்திற்குச் சற்று குறைவானதாக நினைக்கப்படுகிறது. அரசனுக்காக உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருந்தவர்களைப்பற்றிப் படிக்கிறோம். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்றாலும் அரசனிடமுள்ள பக்தியில் கால்பாகமும் அன்னை பிதாவிடமிருக்காது. அதுவும் முற்காலத்தில் கேட்கவேண்டுமா? அரசனுக்கு ஊர் சமாசாரம் தெரியாமல் ஒவ்வொன்றிறதும் "மந்திரி, நமது ராஜ்யத்தில் மழை பெய்கிறதா, குடிகள் சுகமா, வேதியர் தமது விதிகளைச் சரிவரச் செய்து வருகிறார்களா, சிற்றரசர்கள் கப்பங்கட்டி வருகிறார்களா, நமது அரண்மனையில் யாவரும் சுகமா, நான் தவறாமல் சாப்பிடுகிறேனா?" என்று கேட்டுக்கொண்டிருந்ததாக நாடகங்களில் படிக்கிறோமே அப்படி யிருந்தால் 'அரசன்' என்றால் மதிப்புத்தான். அதிலும் வாஸ்தவமாகவே பராக்ரம சாலியாக விருந்தால் எவ்வளவு அன்பும் பக்தியும் ஜனங்களுக் கிருக்கவேண்டும்? இவ்வரசர்களைப் பற்றிக் கவிகள் பாடுவதும், சரித்திரங்கள் எழுதுவதும் இயல்பே. அவர்களைப் பல விதமாகப் போற்றுவது ஆச்சரியமல்ல. அவர்களுடைய செய்கைகளைத் தம் மனம்போனபடி புகழ்ந்து, வியந்து, ஒன்றைப் பததாக்கிக் கூறுவதும் ஆச்சரியமல்ல. அவ்வரசர்கள் இறந்தபின் இவர்களைத் தெய்வங்களாக்குவது

ஓராச்சரிய மாகாது. அனேக கிராமதேவதைகள் ஒரு காலத்தில் அரசர்களா கவோ அல்லது வேறு முக்கிய மனிதர்களாகவோ இருந்தவர்கள் என்பதில் சந்தேகமில்லை. சென்ற அக்டோபர் மாதம் 2-ம் தேதி காந்தியடிகளின் பிறந்த தினக் கொண்டாட்டத்தின்போது அவருடைய படத்திற்கு கோவில் விக்கிரகம்போல் அலங்காரஞ் செய்து ஊர்வலம் நடத்தியது எல்லோருக்கும் நினைவி லிருக்கலாம். உயிரோ டிருப்பவருக்கு இவ்வளவு மரியாதை யென்றால் இறந்தோருக்கு, அதுவும் நாட்கள் செல்லச் செல்ல எவ்வளவு மரியாதை யிருக்க வேண்டுமென்பதை யூகித்துக் கொள்ளலாம். தூரவிருக்கும் பொருள்களே நமக்கு வெகு அதிசயமாகத் தோன்றுகின்றன. ரவீந்திரநாதர் அமெரிக்கா சென்றபோது ஒரு மனிதன் "நீர் ஏன் இங்கு வந்தீர்? நீர் தூர விருக்கும் வரையில் உமமைப் பிரமாதமாக நினைத்திருந்தேன். இப்போது என் அபிப்பிராயம் மாறிவிட்டது" என்றானாம். காந்தியடிகளைக்கூட அமெரிக்காவிற்குச் செல்ல வேண்டாமென்று அனேகர் இந்தக் காரணத்திற்காகத் தடுத்து விட்டார்கள். இறந்த பின் அவர்களுடைய வீரச்செயல்களைப் பற்றிப் பல விதமாகக் கேள்விப்பட்டு ஜனங்கள் அவர்களைப் போற்றித் தெய்வங்களாக்கிவிட்டதால் அரசர்கள், வீரர்கள், தீரர்கள் முதலியோர் கிராம தேவதைகளாகி விட்டார்கள் என்பது அனேக நிபுணர்களுடைய ஆராய்ச்சி.

(தொடரும்.)

# லைப் இன்ஷியூரென்ஸ் பகுதி

(இன்ஷியூரென்ஸ்.)

சில தினங்களுக்குமுன் இங்கிலாந்து பிரதம மந்திரி ராம்ஸே மக்டனல்ட் ஒரு திவ்ய பிரசங்கஞ் செய்தார். அதில் பணத்தைச் சேர்ப்பதற்கும் பிசினறித்தனத்திற்குமுள்ள வித்தியாசத்தை யெடுத்துக் கூறினார். "பணத்தை வெகு ஜாக்கிரதையாகச் சேர்க்கவேண்டும். இக்காலத்தில் தேசங்கள் படும்பாட்டில் தனி மனிதர்பாடு திண்டாட்டமாய்விடும். அதைத் தடுக்கக் கொஞ்சமேனும் பணத்தைச் சேர்க்கவேண்டும். ஆராய்ந்து பார்ப்போமாயின் எத்தனையோ அநாவசியச் செலவுகள் ஏற்படும். இவற்றில் சிறிது பிரயாசைப்பட்டால் சிக்கனஞ் செய்ய முடியும். ஆனால் நீங்கள் பணத்தையெல்லாம் பெட்டியில் பூட்டிவைத்தால் பிரயோஜனமில்லை. அது பிசினறித்தனமாகும். பணத்தை பாங்குகளிலும் மற்ற பொதுவிடங்களிலும் வைத்தால் அது மற்றவருக்கும் பிரயோஜனப்படும். நாம் எதைச் செய்தாலும் நமக்குப் பிரயோஜனப்படுவதோடு மற்றோருக்கும் உதவும்படியாகச் செய்வது கடமையாகும். மேலும் வீடுகள் கட்டுவதற்கு உபகாரஞ் செய்வதற்கென வுள்ள சங்கங்களில் அங்கத்தினராக முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு ஆங்கிலேயருக்கும் ஒரு வீடு இருக்கும் பாக்கியம் பெறுவது அத்தியாவசியம். சிறு குடிலேனும் நம்முடையதெனவிருக்கும் தினத்தைக் காண்பதே மேன்மையான பதவி" என்று கூறியிருக்கிறார். ஒவ்வொரு வார்த்தையையும் ஒவ்வொரு முத்தாகப் பாவித்து எனது மனப்பெட்டியில் வைத்துக் கொண்டேன். இம்மஹானைப்பற்றிப் பேச இது சமயமல்ல. எனினும் அவர் பரம ஏழையாயிருந்து இவ்வுன்னத பதவிக்கு வந்ததன் முக்கிய காரணம் மேற்கூறிய பிரசங்கததைக் கடைப்பிடித்து ஒழுகியதே என்று திட்டமாகச் சொல்லலாம்.

நமது தேசம் தர்மத்தில் செழுத்திருந்தது. இப்பொழுதும் செழுத்திருக்கிறதென்பதற் கையமில்லை. எத்தனை அன்னதான சமாஜங்கள். எத்தனை இலவசச் சத்திரங்கள், எத்தனை வனபோஜனங்கள். கோவில்களுக்கு எத்தனையோபேர் பணத்தை லக்ஷக் கணக்காய் ஏழுதிவிடுகிறார்கள். இது சரியோ தவறோ, பணம் சரியாக உபயோகப்படுகிறதோ யில்லையோ, தர்மத்தின் தாத்பர்யமே, நாம அனுபவிப்பதைப் பிறரும் அனுபவிக்கட்டும் என்பதே. ஆறுகளின் பிரவாகம் சில ஏரிகளில் விழுந்து, அவ்வேரிகள் நிரம்பி மறுபடியும் பிரவாகமாய்ப் போவதைப்பற்றி பூகோள சாஸ்திரத்தில் படிக்கிறோம். இந்தப் புனர்பிரவாகம் காடுகளிலோ பூமிக்குள்ளோ போய்ப பயனில்லாமல் விடுவதைவிட அதைத் தக்கப்படி பாத்திகள்கட்டி வயல்களுக்குப் பாயும்படி செய்தால் எவ்வளவோ நலமுண்டாகும். அம்மாதிரி தர்மஞ் செய்ய எண்ணுவோர் கண்டபடி பணத்தைக் கொட்டாமல் தக்கபடி செய்யவேண்டு

தல் அவசியம். மேலும் நமது தேசத்தில் ஒவ்வொரு பைசாவும் பொன் பட்ட பாடாயிருப்பதால் ஜாக்கிரதையாய் உபயோகிக்கவேண்டும்.

பிசினுறித்தனமென்பது பிறருக்குக் கொடுக்க மனமில்லாமையே. எனக்குத் தெரிந்தவர் ஒருவர் தன்னுடைய வீட்டிற்கு யாராவது வந்தால் "சாப்பிட்டு வந்துவிட்டார்கள்போல்" இருக்கிறதென்று சொல்வார். சாப்பிடும்போதும் அவர்களுக்குப் பதிலாக இவரே "போதும், போதும்" என்று சொல்வார். ஒரு மனிதன் பசியோடு நம்மிடம் வந்தால் அவன் விலாப்புடைக்க அன்னம் படைப்பதைப்போல தர்மம் எதுவுமில்லை யெனலாம். பசியென்று சொல்லும்போதே நமக்கு வருத்தமுண்டாகிறது. ஒரு சிறு குழந்தை மிகுந்த பசியுடன் ரயிலடியில் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தபோது, பால் காபி விற்பவன் ஒருவன் அவ்விடம் வந்தான். அக்குழந்தையின் தாயிடம் செலவிற்கு வேண்டிய பணமே யிருந்ததுபோலும். "அம்மா, காபி!" என்று அது அழுததை யடக்கிப் பயமுறுத்தினள். காபிக்காரன் பார்த்தான். அவனுக்கென்ன வருமானம் இருக்கும்? கேவலம் பதினைந்து இருபது ரூபாய்களிருந்தால் மேல். அவனுக்கு ஒவ்வொரு கோப்பையும் விற்றாலொழிய லாபமில்லை. தன் பாத்திரத்தைக் கீழே வைத்தான். ஒரு கோப்பை காப்பி குழந்தையிடம் கொடுத்துச் சாப்பிடச் செய்தான். அதுவும் தாவி அதை வாங்கிக் குடித்தது. இவனுக்காகவல்லவோ மழை பெய்கிறது?

ஆனல் வரவு செலவு சரியாய்ப் போய்விடும் மனிதருக்கு எவ்வாறு தர்மஞ் செய்ய முடியும்? சோற்றுக்குத் தாளம் போட்டுக் கொண்டிருப்போருக்குத் தர்மம் தலைகாக்குமென்றால், எரியும் உடம்பில் எண்ணெயைக் காய்ச்சி ஊற்றினாற் போலாகுமல்லவா? இவர்கள் பணத்துதவி செய்யவேண்டாம். சரீர சகாயஞ் செய்தாற் போதுமானது, ஒரு கிழவன் "பிள்ளாய், தபாலாபீசுக்குப் போக வழி தெரியவில்லை, சற்று அழைத்துப்போ" என்றால் அதற்கு உடன்பட்டால் அதுவே ஒரு தர்மந்தானே. ஒருவன், "ஐயா, என் கஷ்ட நிஷ்டூரங்களைத் தங்களிடஞ் சொல்லிக்கொண்டால் ஆறுதலாகவிருக்கும்" என்கிறான். அதற்காகச் சில நிமிஷங்கள் கழிப்பது தர்மந்தான். எனக்குத் தெரிந்தவர் ஒருவருக்குக் குழந்தைகள் கிடையாது. அவ்வளவு பணக்காரருமில்லை. விருந்தளிக்கச் சக்தியில்லை. நிலாச் சாப்பாடு சாப்பிடுவதென்றால் அவருக்குப் பிரியம். எனினும் தனியே உண்ணுவதில் என்ன சந்தோஷம்? ஆகவே, அவர் ஒரு சூழ்ச்சி செய்தார். அவர் வீட்டில் ஐந்தாறு குடிகளிருந்தார்கள். அவர்களும் அவரைப்போல் ஏழைகளே. "இன்று நிலவு வெகு அழகாயிருக்குமே. நிலாச் சாப்பாடு சாப்பிடுவோமே" என்றார். அவர்களுக்கு முதலில் எங்கே தங்கள் கையைக் கடிக்குமோவென்ற பயமிருந்தது. ஆனல் அவர், "அதற்காக ஒரு கஷ்டமில்லை. உங்கள் வழக்கப்படி சாப்பாட்டை மாடியில் வைத்துக் கொள்ளுங்கள். எல்லோரும் ஒருமிக்கச் சாப்பிடுவோம். அதில் எவ்வளவு சந்தோஷமுண்டாகிறதென்பதைப் பாருங்கள்" என்றார். அன்றையதினம் எல்லோருக்கும் உண்டான ஆனந்தம் ஒவ்வொரு பௌர்ணமியின்போதும் அவ்வாறே செய்யத் தூண்டிற்று. இதுவும் ஒரு தர்மமல்லவா?

நம்மிடம் அதிகப்படியாயிருக்கும் பணத்தை—எவ்வளவு சிறிய தொகையாயினும்—ஒரு பொது இடத்தில் வைப்பது எவ்வளவோ நன்மையுண்டாக்கும். நாம் பணத்தைப் பூட்டிவைக்காததால் மற்றோருக்கு நம்முடைய அந்

தஸ்து தெரிந்துவிடும் என்ற பயம் அகாரணமானது. நாம் பணக்காரரோ ஏழைகளோ, இன்னொருவர் நமக்கு ஒரு சல்லியும் தண்டத்திற்குக் கொடுக்கப் போவதில்லை. நாமாகக் கைநீட்டி வாங்கப் போவதில்லை. மேலும் நாம் நம்முடைய பணத்தைப் பொருட்காட்சி சாலையில் வைத்து, பேர் எழுதி ஒட்டிவிடப்போவதில்லை. நிதிகளில் பணம் வைப்போமாயின் யாருக்கும் ஒன்றுந் தெரியாது. ஆனால் நாம் பணத்தை இந்த ஸ்தாபனங்களில் வைப்பதால் பலருக்கு அனுகூலமுண்டாகிறது. இப்பணத்தையெல்லாம் திரட்டி வியாபாராதிகளுக்கு உதவுகிறார்கள். வியாபாரம் தழைத்து ஓங்கும்—ஓங்க வேண்டும். அப்போதுதான் தேசத்திற்கு மற்ற நாடுகளில் மதிப்பு.

மேற் கூறிய நிதிகளைப்போல் சில ஸ்தாபனங்கள் வீடுகள் கட்டுவதற்குப் பண உதவி செய்கின்றன. ஏழைகள் தாமாகப் பணஞ் சேர்த்து வீடு கட்டுவதென்றால் ஒருநாளும் சாத்தியப்படாது. ஆனால் ஒரு பட்டணத்திலுள்ள குடும்பம் குடிக்கூலிக்கென்று எவ்வளவு ரூபாய்கள் கொடுக்கவேண்டியிருக்கிறது? சென்னையில் சுமார் 40-ரூபாய்களிக்லாவிட்டால் ஐந்தாறுபேர் சௌகரியமா யிருப்பதற்குப் போதுமான வீடுகள் கிடைக்கா. மாதம் 40 ரூபாய்களென்றால் வருஷத்தில் 480 ரூபாய்கள். பத்து வருஷத்தில் ஏறக்குறைய ஐயாயிரம் ரூபாய்களாகி விடுகிறது ஐயாயிரம் ரூபாய்களுக்கு நல்ல வீடு வாங்கிவிடலாமல்லவா! ஆகவே, வீடுகள் கட்டச் சகாயஞ் செய்யும் நிதியொன்றிற் சேர்ந்து அவர்களிடமிருந்து ஒரு வீட்டைக்கட்டி வாங்கிக்கொண்டு வாடகை கொடுப்பதைவிடச் சந்தாக்களாகக் கொடுத்து சில வருஷங்களில் வீடு நம்முடையதாகிவிடுவது எவ்வளவு லாபகரம்? இதையே பிரதம மந்திரி கூறியிருக்கிறார். நமது தேசத்தில் அவர் கூறியபடி ஒவ்வொருவரும் ஒவ்வொரு வீட்டிற்குச் சொந்தக் காரராய்விட்டால் எவ்வளவு சந்தோஷச் செய்தியாய்விடும்! நமக்கெல்லோருக்கும் அது கௌரவமல்லவா. ஆகவே. அன்பர்கள் இதைக்குறித்து ஆழ்ந்த யோசனைசெய்து கூடிய சீக்கிரத்தில் இம்மாதிரியொன்றில் கலந்து கொள்வார்களாக.

நிற்க, வீடுகளிருந்தால் மாத்திரம் போதாது. வீடுகள் சாஸ்வதமாக நம்மிடத்திலேயே இருப்பதற்குவேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டும். வீடுகளைச் சில தினங்களிலோ, வருஷங்களிலோ விற்றுப்போட்டால், இவ்வளவு சிரமமும் வீணாகுமே. அதற்காக, பணமும் சேகரித்து வைக்கவேண்டும். பணம் சேகரிப்பதும் வெகு கடினமே. பணத்தை ஒவ்வொரு ரூபாயாகச் சேர்ப்பது எவ்வளவு கஷ்டம். இதைவிட ஒரு நிதியை வாங்கிக்கொண்டு அதற்கு வருஷத்திற்கு இவ்வளவு என்று சந்தா செலுத்திக் கொண்டுவந்தால் விசேஷ அனுகூலமுண்டாகும்.

இதில் இன்னொரு விஷயம். வீடுகளுக்கென்று கொடுக்கும் பணம் முழுவதும் கொடுப்பதற்குமுன் சொந்தக்காரன் இறந்துவிட்டால் அவன் குடும்பத்தார் அதற்குப் பிறகு ஒன்றுங் கொடுக்கவேண்டாம். வீடு அவர்களுக்குச் சொந்தமாய் விடுகிறது! அவன் ஒரு சந்தா கொடுத்து இறந்து போகட்டும், பத்து சந்தாக்கள் கொடுத்து இறந்துபோகட்டும். வீடு குடும்பத்திற்குச் சொந்தம் சொந்தந்தான்.

மேற்கூறிய நிதியும் இவ்வாறே. சந்தா சந்தாதார் மரணத்தோடு நின்றுவிடுகிறது. அதற்குமேல் ஒரு நிபந்தனையுமில்லை! பணம் பூராவும் வந்துவிடும்.

துருபதராஜன் தவஞ் செய்யும்போது பகவான் பிரத்தியக்ஷமாகி "என்ன வேண்டு"மென்று கேட்டார். "துரோணாசாரியாரைக் கொல்ல ஒரு புத்திரன், அர்ஜுனனுக்கு விவாகஞ் செய்து கொடுக்க ஒரு பெண்" என்றான். இக் காலத்தில் நம்முடைய தவம் பகவானுக்கெட்டி என்ன வேண்டுமென்று கேட்பாராயின், அறிவாளர் என்ன சொல்ல வேண்டுமென்றால் "என் ஏழ்மைச் சத்துருவை யொழிக்க ஓர் இன்ஷியூரென்ஸ் பத்திரம், என் குடும்பத்தோடு இல்லறம் நடத்த ஒரு வீடு" என்பதேயாம். கடவுளும் இந்த வேண்டுகோளுக்கு அவசியம் இரங்குவார். அன்பர்களே! இப்போதே இம்மாதிரி நிதிகளைத் தவப்பயனாகப் பெறுவது அனாவசியம். அதிர்ஷ்ட வசத்தால் கடவுள் நமக்கு அந்தக் கஷ்டங்களைக் கொடுக்காமல், இன்ஷியூரென்ஸ், வீடு முதலிய ஸ்தாபனங்களை யேற்படுத்தும்படி மனிதனுக்கு அறிவு கொடுத்திருக்கிறார். நம்மாற்றான் தாமதம். இந்த அசட்டையை நிறுத்தி முன்னேற்ற முறையை இனிமேலாவது அனுசரிப்போம். போதும் உறக்கம். வரட்டும் விழிப்பு.

---

சுப்பன்:—"நீ ஏன் கலியாணம் செய்து கொள்ளவில்லை?"

குப்பன்:—"புத்திசாலியா யிருக்கிற காரணத்தால்."

# மாதர் உலகம்



## பிராட்டியார்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

சென்றமாத வெளியீட்டில் குறிப்பிட்டபடி இராமாயண கதா நாயகியாராகிய சீதாபிராட்டியாரைப் பற்றிச் சிற்சில குறிப்புகளை வரைய எண்ணுகையில் வரத்தால் உயர்ந்த கவிச் சக்கிரவர்த்தியே "சொல்லும் தன்மைத்தன்றது" என்று தலைக்கட்டிய வாய்மை நினைவிற்கு வருகின்றது. மக்களை மக்களினமும், விலங்குகளை அவ்வினங்களும், பறவைகளாதி பல்லுயிர்களையும் அவ்வவ்வுயிர்களும், கண்டு இன்புறுதலே இயற்கை நியதியாகும். அங்ஙனமிருக்க அதற்கு மாறாகக்,

"குன்றும், சுவரும், திண்கல்லும், புல்லும்,
கண்டுருகப் பெண்கனி நின்றாள்."

என்று எடுத்துக் கற்றோர் உடலையும் உணர்வையும் ஒருங்கே கனிந்துருகும்படி பிராட்டியாரின் வனப்பின் இயற்கைக் காட்சியை வருணித்திருக்கும் பெருமித நிலைமையை என்போற் புல்லறிவாளர் ஆராய முந்துவது அறிவுடைமையன்றென்பது தெளிவு. எனினும், குன்றும், சுவரும் திண்கல்லும், புல்லும் இயற்கைக்கு மாறாகப் பிராட்டியாரின் சந்நிதி விசேடத்தினால் உணர்ந்து உருகும் தன்மை பெறுவதுபோலவே இதில் எனது தலையீடுமென அறிஞர் பொறை கூர்வாராக.

சர, அசரம், ஆகிய அனைத்தும் சக்தியின் பரிணாமங்களே யென்பது சுருதி யுண்மையாதலின் அவ்வுலக மாதாவைக் கண்டு உள்ளுருகும் தன்மை சடப்பொருள்களுக்கும் பொருந்து முறையேயாகும் என்னும் உண்மையைக் கவியரசர் ஆரம்பக் காட்சி ஓவியத்திலேயே புதை பொருளாக அமைத்துக் காட்டியிருக்கின்றார். பிரான், பிராட்டி யென்னும் சொற்களே, கடவுட்டன்மையை யுணர்த்துவதால் அப்பெயர் கொண்டே ஆளுதல் மரபாகும்.

இனி பாலகாண்டத்தில் தான் நமது கவிஞர் பிராட்டியாரைப் பற்றி முதலாகக் கூறப்புகுகின்றார்.

"பொன்னின் சோதி பூவினில் நாற்றம் பொலிவேபோல்
தென்னுண்டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்."

என்று எப்பொருள்களிலும் ஊடுருவி அபின்னமாகி நின்று அவைகளை

உயிர்ப்பிக்கும் ஸத்துவ சக்தி இவர் என்பதை தொடக்கத்திலேயே உணர்த்தி வழிபடுகின்றார்.

ஒளியில்லாத பொன்னையும், மணமும் மலர்ச்சியுமில்லா மலரையும், சுவையில்லா மதுவையும், இன்பந்தராத கவியினையும் எவர் விரும்புவர்? எல்லா ஜடப் பொருள்களிலும் பரிணமித்து நின்று நிலவச் செய்வது எந்த மகாசக்தியோ அச்சக்தியே இவர் எனின் இவரது பெருமையை இவரால் ஒளியுற்ற சிவர் எடுத்துக்காட்ட ஒண்ணுமோ? கண்ணன், தனஞ்சயனை நோக்கி நீரில் சுவைபோலவும், சந்திர சூரியர்களுக்குள் இருவகை ஒளிகளாகவும் வேதங்களுக்குள் பிரணவமாகவும், ஆகாயத்தில் நாதமாகவும் நரர்களுக்குள் புருஷனாகவும் நான் வியாபித்திருக்கின்றேன் என்று கூறுவதன் பொருட்செறிவே இங்கு நிகழ்கின்றது காண்க. பின்னும்,

"உமையாள் ஒக்கு மங்கையர் உச்சிக் கரம்வைக்கும்
கமையாள்"

என்று பிராட்டியாரின் தோற்றத்திலேயே நிகழ்வதாகிய பரம சாந்தத்தின் பூரணப் பொலிவினை ஒருவாறு விளக்குகின்றனர். பொறைக் கடவுளாகிய பூமியிற் பிறந்த இப்பெண்மைத் தோற்றத்தில் தலையாய கமை அதாவது பொறை சிறப்பாக விளக்க முறுவது இயல்பேயன்றோ? தாய்க்குணம் மகள் பால் இலங்குவதாகவே கவி புனைந்துரைக்கின்றார். இவரை ஒப்பதோர் பெண் வடிவினை இன்றளவும் பிதாமகனாகிய பிரமன் படைத்தானில்லை. படைத்ததுண்டெனில் இவர்போலவோ அல்லது இவர்க்கு ஒரு சிறிது ஒப்பவோ இன்னம் ஒரு பெண்ணை இதுகாறும் தோற்றுவித்திருக்கலாம். அவ்வாறு இன்றளவும் படைத்ததில்லை. ஆகவே தானே அறத்தை நிலைநிறுத்த அவனியில் அவதரித்த அழகுத் தெய்வம் இவர் என்னும் உண்மை தோன்ற,

"பெருந்தேர் அல்குற் பெண்ணிவள் ஒப்பாள் ஒரு பெண்ணைத்
தருந்தான் என்றால் நான்முகன் இன்னுந் தரலாமே"

எனவும் அருளிச் செய்துள்ளார். தன்னையீன்ற தாயைத் தான் தருவதெப்படி? உலகனைத்தையும் ஒருங்கே யீன்ற அன்னையிவர் என்பதை இதனாலும் உணர்த்தும் நுட்பம் புலப்படுகின்றது. தேவாசுரர் கடைந்த காலத்தில் கடலிற் பிறந்ததாகக் கூறப்படும் திருமகள் சீதையாக அவதரித்து மண்ணுலகில் வயங்குதலால் இனி அக்கடலும் இவர்போலும் ஒரு பெண்ணை இனித் தோற்றுவிக்க மாட்டாதெனவும் முடிவு கட்டுகின்றார். கடலமுதும் புவிநலமும் ஒருங்கே பெண்வடிவங்கொண்டு அவதரித்துத் திகழ்வதால் இனி அவ்விரண்டும் இவர்போன்றொரு திருவைத் தோற்றுவிக்க இயலாதெனபது குறிப்பு. படைப்பில் எழும் பெண்மைத் தோற்றங்களை யெல்லாம வியந்து புகழ வேண்டுவதற்குப் பெருஞ்சுட்டாகக் கொள்வது எந்த சோபைத் திருவினையோ—அந்த ஒப்பில்லாத் தெய்வச் செழுஞ்சுடரே, இப்பிராட்டியாராகத் திருவுருக்கொண்டு விளங்குதலால் இவரை வேறு எவரைக் கொண்டு ஒப்பிடுவது? எவ்வகை நாடியுரை செய்வது?—என்று அந்தரவானத்தவரெல்லாம் தியங்குகின்றார் எனவும் கவிவேந்தர் பெருமூச் செறிகின்றார்.

உமையாள் உச்சிக்கரம் வைக்கும் என்றுரையாமல் உமையாள் ஒக்கும் மங்கையர் என்றருளிய குறிப்பு அரிய பெரிய கருத்துக்களைத் தன்னுள் அடக்கிக்கொண்டு திகழ்கின்றது.

என்னை? ஆதிபராசக்தியாகிய உமையாளை ஒத்த பெண் தெய்வம் பிறர் ஒருவர் உளரோ? இல்லையென்பது வெள்ளிடைமலை. ஆயின் ஒக்குமங்கையர் என்று கவி கூறியது பொருந்துமோ வெனின், கற்பிற் சிறந்த மங்கையர் என்பதே அதன் உண்மைக் கருத்து. உவமை யாட்சியிலும் உவமிக்க முடியாத ஒன்றைக் கூற நேரிடுங்கால் ஒப்புவமையில்லா வுயரிய ஒன்றனைச் சுட்டுதல் வழக்காதலின் தனக்கிணைவேறில்லா உமையவளுக்குச் சமமான கற்புடை மங்கையரும் கைகூப்பி வணங்கும் நிறையுடையவர் இவர் என்பது குறிப்பு. முன்னம் இமயத்தில் சிவபெருமான் உமையவளைத் திருமணங் கொள்ள எழுந்தருளியபோது வடபுறம் பாரத்தினாலாழ்ந்து தென்புறம் நிமிர்ந்ததாக, அக்கால் தேவர் அச்சந்தீர குறுமுனி என்னை யொப்பான் லோபாமுத்திரை உமையை யொப்பாள் என்று பரஞ்சுடர் கடவுள் பகர்ந்து அம்முனிவனைப் பொதியத்திற் கனுப்ப அதனால் பூமி சமநிலை பெற்றதாக ஓர் புராண கதையுமுண்டு. அன்றியும், பெண்மைக்கே பிராட்டியார் அவதாரம் பெருஞ் சிறப்பளித்த தென்பதில் ஐயமில்லை. அறநதை நிலைநிறுத்தி, உலகை யுய்விக்கவே அவதாரங்கள் தோன்றுதல் நியதி. அம்மட்டோடு அமையாமல் பெண்மையின் மாட்சியினையும் கற்பின் திண்மையினையும், பரஸ்பர நம்பிக்கையில் இருபாலார்கட்கும் உள்ள இயற்கைப் பேதங்களையும் நிரூபிப்பதற்குப் பிராட்டியாரின் தோற்றம் பயன்பட்டதாகும். இது குறிப்பிடுங்கால் உமையாள் ஒக்கு மங்கையர் உச்சியிற் கரங்கூப்பி வணங்குவதில் வியப்போ? இழுக்கோ? இல்லை, இல்லை. இராவணனிடம் அசோகவனத்தில் பிராட்டியார் தமக்கும் தமது நாயகருக்கும் உள்ள அன்பின் ஆழத்தை விளக்கிக் காட்டு முகத்தினால்

"எனக்குயிர் பிறிதும் ஒன்றுண்
டென்றிரேல் எனக்கும் அன்றித்
தனக்குயிர் வேறின்றாகி."

எனும் கவியைக் கூறுவதாகக் காண்கின்றோம். தன்னைப் பிரிந்திருக்கையிலும் ஆடவரும் பெண்மையை அவாவும் தோளினனாகிய தனது காதற் கணவனவரது சதிவிரத உறுதியில் பூரண நம்பிக்கையுடையவராயிருப்பது இக்கவியினால் நன்கு உணரப்படுகின்றது. இராவண வதத்திற்குப் பின்னர் பிராட்டியார் இராமனை யணுகியபோது தன்னை ஐயுற்றுக் கடுமொழி வழங்கியதாயும் அந்நிந்தை பொறாமல் தீயில்மூழ்கத் துணிந்த பிராட்டியார் கூறியதாகவும் ஒரு செய்யுள் உளது அதாவது,

"பங்கயத் தொருவனும் விடையின் பாகனும்
சங்குகைத் தாங்கிய தருமமூர்த்தியும்
அங்கையின் நெல்லிபோல் அனைத்தும் நோக்கினும்
மங்கையர் மனநிலை யுணர வல்லரோ"

என்பதே. இச்செய்யுளின் கருத்து ஆடவர் குலமே நாணித் தலைகுனியத்தக்க தொன்றாகும். உயிரையே வெறுத்து அனற் குளிக்கத் துணிவுபூண்ட பிராட்

டியார் அஞ்சாது பெண்கள் மனநிலையை அறியும் வல்லமை ஆக்கல், காத்தல், துடைத்தல் என்னும் முத்தொழிலையும் செய்யும் மும்மூர்த்திகட்கும் இல்லை யென்று கூறினர்.

வேஷ்டிகட்டி விபரீத காரியங்களி லீடுபடும் இனத்திற் சேர்ந்த ஒருவர் இருவர் இந்நாளிலும் சேலை கட்டிய மாதரை நம்பலாகாதெனக் கவிபுனைந் திருப்பதும் கண்கூடன்றோ? கற்பைக் காப்பதில் பெரும்பாலும் ஆடவரிலும் பெண்கள் கவனமும் கண்டிப்பும் உடையவர்கள் என்பது முழு உண்மை. அங்ஙனம் இன்றி ஒரு சில பெண்கள் தவறாய முறையில் இறங்குவதற்கும் அநேகமாய் ஆண்பாலாரின் தீவிர முயற்சியே காரணமென்பதை யறியாதார் இரார். அங்ஙனமிருந்தும் சேலைகட்டிய மாதரை நம்பலாகாதென மகுடமிட்டுக் கவிபாட ஆடவர் துணிந்தனர். வேட்டி கட்டிய வேடதாரிகளை நம்பலாகாதெனப் பெண் கவி எவரும் கண்டித்தெழுத விழைந்திலர். இது தான் பெண்மையின் இயற்கை. தன்னடக்கத்தின் பெருமை. பிராட்டியார் கூற்றாக இப்பெரிய உண்மையை நிலைநிறுத்திய கவியரசர் பெருமானுக்குப் பெண்ணுலகம் யாது கைம்மாறிழைக்கவுளது ?

அன்றி இக்கவியினால், தன்னை, தான் எதிர்பாராத முறையில் இழிவுபடப் பேசிய கணவனை எழுந்த சினத்தினால் தாக்கியும் பேசாது, தனது கணவனே தன் மனநிலை காணவல்லவர் அல்லவரானபோது கடவுளர்கட்கும் அத்தகைய ஆற்றல் இல்லையென்று முடிவுகட்டுகின்றார். எத்துணை கோபமூண்டபொழுதும் தனது கணவனைவிடக் கடவுளரை மேன்மை யறிவுடையவராக மதிக்கப் பிராட்டியார் மனம் துணியவில்லை. புதிய கோபக் கனலினால் பழைய மதிப்பு குன்றாதிருந்த நயமும் அவர்தம் பெரும் பண்புக்குப் பின்னும் ஒளிநல்குவதாகும். பெண்ணுலகத்தின் பெருமையை அரியாசனத் தேற்றிய பிராட்டியாரை உமையாள் ஒக்கு மங்கையர் உச்சிமேற் காங்குவித்திறைஞ்சுவதில் என்ன தடையுளது.

ஏனைய பெண்ணரசிகட்கும் பிராட்டியாருக்கும் உள்ள பேதத்தினைக் கவியரசர் பின்னும் இடங்கண்டபோதெல்லாம் விளக்கிவைத்துள்ளார். இவைகளில் சதாநந்தராகிய ஜனக குருவானவர் விசுவாமித்திரரிடம் பிராட்டியாரின் வரலாறுகளை விளக்கும்போதும்,

"குணங்களை யென்கூறுவது கொம்பினைச்
சேர்ந்தவை யுய்யப் பிணங்குவன" எனவும்,

"அழகிவளைத்தவம் செய்து பெற்றது
காண்"

எனவும் ஒரு கவி கூறுகின்றார்.

என்னை, குணநலங்களே இருபாலராகிய மக்களை யுயர்விக்கும். அங்ஙனமிருக்க பிராட்டியார் இதயதாமரையில் இடம்பெற்றுத் தாம் பிரகாசிக்க வேண்டும் என்னும் பெரு வேட்கையினால் நற்குணங்களெல்லாம் தம்முன் போட்டி போட்டு நான் முந்தி நீ பிந்தி என விரைந்து குடிபுகுந்தன. பல கொடிகள் மீதேறிப் படர்வதற்கு ஒரு சிறந்த கொழு கொம்பினை வளைந்து பற்றுதல்போல இவர் குழவிப் பருவத்திலிருந்தே பெண்மைக் கியல்பாகிய

பெருங் குணங்கள் யாவும் விளக்கமுறத் தலைப்பட்டன என்பதே பொருளாகும்.

துற்குணம் உள்ள இடத்திலும் ஒரு சில நற்குணம் அமைந்துளது. "பிழையிலான்கடவு ளன்றிப் பின்னையோர் மாந்தர் இல்லை" என்பதாகிய ஆன்ற மொழியும் முற்றும் நற்குணங்கள் நிரம்பப்பெற்ற மக்கள் இல்லை என்பதையே குறிக்கின்றது. தீயரோடு அளவளாவ நேருங்கால் நல்லோர் அருவருப்புறுதல்போல நற்குணங்களும் தீக்குணங்களோடு ஒன்றி நிற்கும்படி நிகழ்வதில் இன்புறமாட்டா. அவரவர்களின் வினைகட்கேற்பவன்றோ இவ்விருவகைக் குணங்களும் அமையவேண்டி வருகின்றது. இத்தகைய இடர்ப்பாடு ஏதுமின்றி முற்றும் தூய குணங்களே பிராட்டியாரின் இதயமலரிற் குடிபுகும் பேறு வாய்த்ததில் அக்குணங்கட்குப் பெரிய ஆவல் பொங்கிப் போட்டி போடவும் தலைப்பட்டன எனக் கவி கூறுகின்றார். எப்பொருள்கட்கும் குணமாக நின்றிலகும் இவரை குணங்களினின்றும் வேறு பிரித்து விளக்குவதே ஈண்டுப் படிப்போர்க்கின்பம் பயப்பதாகும். இதற்கடுத்தாற்போல்,

"அழகிவளைத் தவஞ் செய்து பெற்றதுகாண்."

என்றும் அமையா வியப்பிற் புகல்கின்றார். உலகனைத்தையும் பெறாது பெற்ற பிராட்டியாரை அழகுபெற்றதென்று கூறினர் கவிவேந்தர். அதாவது பிராட்டியாரின் ஸர்வ அவயவங்களிலும் நிரம்பி நின்று (அழகு என்னும் கண்கவா வனப்பு) பிரகாசிக்கும் பாக்கியத்தினைப் பல்லூழிகாலம் தவம் செய்து பெற்றதென்றார். சிறந்த அழகு என்பதும் மக்களிடை பூரணமாக நிரம்பியிருப்பதில்லை. விரும்பத்தக்க சில அவயவ விசேடங்களிடையே வெறுக்கத்தக்க சில அமைப்புகளும் உள. பெரும்பாலும் அழகற்ற வடிவங்களிலும் ஒரு சிறு இலக்கணம் இடையே திகழ்வதும் உண்டு. இவைகளுமன்றி அன்பு பூண்டார்க்கு அரூபம் தோன்றுவதில்லை. அன்பில்லா இடத்தில் உள்ள ரூபமும் தோன்றுவதில்லை. இம்மட்டில் அமையாமல் ஒரு நலனும் இல்லாரையும் சுயநலமிகளான சிலர் எல்லா நலமும் இருப்பதாகப் புனைந்து போற்றவும் பின்வாங்குவதில்லை. இத்தகைய பொருத்தமற்ற எண்ணிறந்த இடர்களால் உலகில் படைப்புத் தோன்றிய காலந் தொட்டே கலப்பற்ற தனது சோபையைப் பிரகாசிக்கச் செய்ய உரியதாகிய ஓர் உத்தம அவதாரத்தைத் தவஞ் செய்தாவது பெறுதல் வேண்டிய, அழகுத் தெய்வம் நோன்புழந்தே பிராட்டியாரின் திருமேனியைத் தனக்குரிய பீடமாகப் பெற்றதென்பதே இதன் பொருளாகும். குணங்களையும் பேரெழிலையும் தொடர்ந்து கூறிய காரணம் இரண்டிற்கும் உள்ள தொடர்பினைப் பற்றியே என்பது தெளிவு. இதனை,

"நாமநூல் பகரு முன்னூலோர்
இலங்கெழில் அளவு குணமென இசைப்பர்."

என்ற 'நைடத' காவியத்திலும் உணர்கின்றோம். இவ்வளவையும் படிப்போர் இவைகள் யாவும் புலவர்களின் கற்பனைத் திறமையேயாகும். பிராட்டியார் அவதரிப்பதற்கு முன்னிட்ட காலத்தில் ரூபவதிகள் தோன்றியதில்லையா? புலவர்கள் அழகிற் சிறந்தவர் எனப் போற்றியதில்லையா? எனக் கூற முற்படலாம். இத்தகைய விவாதத்தினை எதிர்நோக்கி மேலும் கவி,

"கணங்குழையாள் பிறந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த ஆறெல்லாந் தார் வேறற்றார்."

எனத் தக்கவாறு சமாதானமும் கூறுகின்றார். ஆகாய கங்கை யென்றழைக்கும் புனிதநதியை பகீரதச் சக்கிரவர்த்தி தனது சலியா முயற்சியினால் மண்ணில் பெருகச் செய்தான் என்பது சரித்திர வரலாறு. அவ் வரலாற்றின்படி அக் கங்கையாறு இந்நிலவுலகில் வருவதற்கு முன்பும் இங்குப் பல பல புண்ணிய நதிகள் பெருகிக்கொண்டிருந்தன என்பதை மறுப்பாரில்லை. என்றாலும் உலகிலுள்ள எல்லா நதிகளுக்கும் கங்கையாறு பெருகத் தொடங்கியபின் மகிமை மழுங்கியதென்ப துண்மை. அதாவது தெய்வநதியின் வரம்பு கட்ட முடியாத மாண்புக்கு முன்னர் பழைய நதிகளின் புகழ்கள் எல்லாம் சூரியன் உதித்தபின் நட்சத்திரங்கள் ஒளிகுன்றுதல்போல மறைந்தொழிந்தன. கிணற்றிலோ குழாய் நீரிலோ ஸ்நானம் செய்பவர்கள்கூட (நாகரிகம் மிகமிகக் கொழுந்தோடிப் படர்ந்திருப்பதாகக் கொள்ளும் இஞ்ஞான்றும்) கங்கா ஸ்நானம் என்று தமக்குள் (தம்மை யறியாமலேயும்கூட) சொல்லிக் கொள்ளுவதைக் காண்கின்றோம். ஆதலின் கங்கையெனும் அணங்கிழியப் பொலிவிழந்த ஆறுகள் என்று கம்பர் கவி இன்றும் பொருந்துவதொன்றே யாகும். இதைப்போலவே உலகம் தோன்றிய காலத்திலிருந்தே பிரமன் படைப்பில் எத்தனை எத்தனையோ ரூபவதிகள் தோன்றியிருந்திருப்பார்கள். அத்தனை யத்தனை வனிதையர்களின் பேரழகெல்லாம் பிராட்டியார் அவதரித்த பின்னர் தத்தமது பெருமை யிழந்தன. இருந்தும் பிரகாசியா தொழிந்தன என்று முற்றத்துறந்த முனிவராகிய சதாநந்தர் கூறியதாகக் கவியரசர் கூறுகின்றார். பஞ்ச கன்னிகைகளுள் ஒருவராகிய அகல்யை அழகிற் சிறந்த அணங்கென்பது அவர் சரித வரலாற்றிலிருந்தே யுணரலாம். அவர் வயிற்றில் உதித்தவர் சதானந்தர். அவரே இவ்வாறு புகன்றார் எனில் அழகின் எல்லை காணாத ஒருவரால் சொல்லப்பட்ட வாய்மொழியென இதனைப் புறக்கணிக்க விடமுண்டோ? இது நிற்க கோலங்காண் படலத்தில்

"துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்
தொன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றுமுல கேழுமர செய்தியுளனேனும்
இன்றுதிரு வெய்தியதி தென்னவயம் என்றான்"

என்று அதிசயித்ததாகப் பின்னும் ஓரிடத்தில் உரைக்கின்றார்.

பல ஆயிரக்கணக்கான அரசகுல மங்கையர்களை மணந்து திருவிற்றொடர் போக பௌவத்திற்றோய்ந்து கடந்தவராகிய தசரத சக்கரவர்த்தியே பிராட்டியாரின் திருமேனிக் காட்சியை முதலாகக் கண்டபோது திடுக்கிட்டு எழுலகங்களும் அரசுபுரிந்து வெற்றிக்குரிய எட்டுத் திருமடந்தையர்களும் என்னிடம் இன்றும் பொலிந்து வாழ்கின்றனர். எனினும் இன்றே என்பால் உண்மைத் திருமகள் வந்தனள். இஃதென்ன வெற்றியெனத் தனக்குள்ளேயே வியந்து விம்மித மெய்தினர் என்பது பெறப்படுகின்றது. இத்தகைய நித்திய மங்கள ஸௌந்தரிய சோபையின் அதிதேவதையாகிய பிராட்டியாரைத் தோற்று வாயிலேயே கவிவேந்தர் 'சொல்லுந் தன்மைத் தன்றது' என்று முடிவுகட்டியதில் பிழையுண்டோ? மாசற்ற ஞானிகள் மனக் கண்களால் கண்டு களிக்

கத்தக்க பேரின்பத்தினை வாக்கினுற் புகலுதல் எங்ஙனம் பொருந்தும். பின்னரும் பிராட்டியாராகிய அழகுத் தெய்வத்தினை அதிர்ஷ்ட தேவதையை அரச போகத்தில் நவ யௌவன சுகாநுபவத்தில் கவலையின்றித் திளைத்திருக்கும் சந்தர்ப்பத்தில் நமது கவிவேந்தர் செலுத்திய கவனத்திலும், மரவுரி யணிந்து ஒப்பனை செய்யும் பாங்கியரின்றி அறுசுவை யுண்டியைப் பரிந்தூட்டி யுபசரிப்பாருமின்றி இளமடந்தையர்க் கியல்பான பல்வகைக் கோலங்களுமின்றி, வனத்தில் தவமடந்தையாக வதியுங்கால், காட்டிய காட்சி சிறப்புடையதாகும். மனிதகுலத்தையே இயற்கையிற் பகைக்கும் தன்மை வாய்ந்த வல்லரக்கியாகிய சூர்ப்பநகை இராவணனிடம் சென்று பிராட்டியாரைப்பற்றிப் பல படத் துதிக்கின்றாள். அவைகளுள் தலைமையாய கவி.

"காமரூ முரலும்பாடல் கள் ஏனக்கனிந்த இன்சொல்
தேமலர் நிறைந்தகூந்தல் தேவர்க்கும் அணங்காமென்னத்
தாமரை யிருந்தவையல் சேடியாம் தரமும் அல்லள்
யாம் உரைவழங்க லென்பதேழைமைப் பாலதன்றோ"

என்பதேயாம்,

பெண் இனத்திற்கே பெருமை யளிப்பவள் திருமகள். அத்திருமகள் என்று கூறப்படும் அழகின் தெய்வம் நான் கண்ட வனவாசியான தவமடந்தைக்குத் தாதிவேலை செய்யவும் தகுதி யுடையவளாகாள் என்று சூர்ப்பநகை கூற்றாக மொழிகின்றார். திருமகளே பிராட்டியாராகப் பூவில் அவதரிக்கின்றனர் எனினும் இவர்பால் குடிகொண்டு ஒப்புவமை யற்றதாய்—சொல்லுந்தன்மை கடந்ததாய் விளங்கும் சவுந்தரிய வெள்ளத்திற்கு இவரது மூலவடிவமாகிய இலக்குமியின் பிரகாரம் மிக மிகக் குறைவென்பதே இக்கவியின் கருத்தாகும். உலக வளர்ச்சி முறை கண்டோரும் தோற்றங்கள் ஒன்றைவிட மற்றொன்று சிறந்த முறையில் அமைவதியல்பெனக் கூறும் முடிவிற்கும் இது பொருத்தம் உடைய தொன்றாகும்.

விவாககாலத்தில் ஆபரணாதிகளின் மீதுள்ள மோகத்தினால் பேதமைத் தாதியர் பற்பல அணிகளினால் பிராட்டியாரின் திருமேனியை மறைத்தனர் என்று கூறவந்த கவி அழகினுக்கழகு செய்வதாக எண்ணி அவர் மேனி யழகினை மறைத்துத் தமது அறியாமையை வெளிப்படுத்தினர் என்று மனம் வருந்தி இம்மிழ்திரைப் பரவைஞாலம் ஏழைமையுடைத்தென்று இரங்குகின்றார். இயற்கை யழகிற்கும் செயற்கை யழகிற்கும் உள்ள வேற்றுமை அறிவுடையோர்க்கு இன்றும் விளங்குவ தொன்றாம். அறிஞரில் அறிஞராய்க் கவிஞரிற் கவிஞராகிய பெரியாரின் மனம் இயற்கைப் பொலிவினை மறைக்கும் செயற்கை யொப்பனைகளை அருவருக்காமல் எங்ஙனம் ஏற்கும்? இவைகள் அன்னார் செல்வப் பெருக்கினை வெளிப்படுத்தும் அடையாளங்களாகக் கொள்ளலாம். அதோடு பெண்கள் அறியாமையிற் சிறந்தவர்கள் ஏமாற்றத் தக்கவர்கள் எனச் சிலர் கூறும் கூற்றிற்கு நற்சாட்சிப்பத்திரம் அளிப்பதாகவும் பாவிக்கலாம்.

(தொடரும்)




# சிலம்பொலி.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ. பி. எல்.)

சிலப்பின் கதை யிசைத்த சேரர்பெருமான் செந்தமிழ் நாட்டிற் சிறந்து பற்றுடைய கவிஞராய்த் திகழ்ந்தார். தமிழ்மொழி வழங்கும் நாடு தெய்வ மணங்கமழும் திருநாடாகவே கவிஞர் உள்ளத்துள் மிளிர்வதாயிற்று. தமிழகத்தின் வடபாலுந் தென்பாலும் பெருந்தெய்வங்கள் நின்று காவல்புரியும் பெற்றியை நினைந்து கவிஞர் களிகூர்ந்தார். தொல்காப்பியமென்னும் பழந்தமிழ் இலக்கண மெழுந்த காலத்து வடவேங்கடமுந் தென்குமரியும் தமிழகத்தின் எல்லையாய் அமைந்து விளங்கிய தன்மையை அறிவிக்கப் போந்த பனம்பாரனார் என்னும் பழந்தமிழ்ப்புலவர்,

"வடவேங்கடந் தென்குமரி யாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகம்"

என்று எல்லை குறித்தமுறை தொல்காப்பியப் பாயிரத்திற் காணப்படும். வடமொழிக்கும் தென்மொழிக்கும் வரம்பாய் அமைந்த வேங்கடமலையை வட எல்லையாகவும், குமரித் துறையைத் தென்னெல்லையாகவும் கொண்டு திகழ்ந்த தமிழகத்தின் பரப்பும் சிறப்பும் பனம்பாரனார் மொழிகளால் பண்புற விளங்கக் காணலாம். சிலம்பின் கதையால், சீரிய உண்மைகளை உணர்த்தப் போந்த செஞ்சொற் கவிஞராய இளங்கோவடிகள் தமிழகத்தின் எல்லை குறிக்க நேர்ந்தபோது,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நாடு"

என்று புகழ்ந்துரைப்பாராயினர். வடபாலமைந்த விழுமியமலை, சேரர்பெருமான் மனத்தில் நெடியோன் குன்றமாக இலங்குகின்றது. மும்மைசா லுலகமெல்லாம் காக்குங் கடப்பாடுடைய நீலமேனி நெடியோன், சீர்பூத்த செந்தமிழ்நாட்டின் வடபால் நின்று காக்கின்றானென்று கவிஞர் கருதுகின்றார். நல்லாரை ஆக்கவும் அல்லாரை அழிக்கவும் வல்ல நிறையமைந்த கன்னி தென்பாலமைந்து தெய்வத் தமிழ்நாட்டைக் காக்கும் முறைமையைக் கருதும்பொழுதும் கவிஞர் உள்ளம் களித்து நிமிர்கின்றது. இவ்வாறு கடவுளர் காவலில் அமைந்த கன்னித் தமிழ்நாட்டின் செம்மையைச் சிலம்பொலியா லிசைத்த செஞ்சொற் கவிஞரது கவிநயம், இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த

ஓர் இளங்கவிஞர் நெஞ்சை அள்ளுவதாயிற்று. பண்புற்ற தமிழ்நாட்டின பெருமையைப் பேசப் போந்த பாரதியார்,

"நீலத்திரைக் கடலோரத்திலே நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றமிவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு"

என்ற மணிமொழிகளால் எழுதி யமைத்தார். நீலத்திரை சுருட்டும் கருங் கடலின் நெடுங்கரையில் கன்னித்தெய்வம் நின்று காவல்புரிகின்றதென்றும், வேங்கடமென்னும் ஓங்குயர் மலையில் பைந்தமிழின் சுவையறிந்த பச்சைப் பசுங் கொண்டலாய் திருமால் கண் துயிலாது நின்று காவல் செய்கின்றான் என்றும், பாரதியார் இசைத்த பாட்டில், சிலம்பொலியின் எதிரொலி சிறந் தொலிக்கக் காணலாம். இவ்வாறு 'பசுந்துளவ மாலையனும் பைந்தமிழ்ப் பாவையும் கண்ணிமையாது காக்கும் தமிழ்நாடு, நற்றவம் முயலும் சான்றோ ருறையும் நல்லுலக மாதலால், செயற்கரிய செய்து செம்மையுற்ற செந்தமிழ் முனிவர் மேற்றிசையில் நின்று தமிழகத்தைப் போற்றுகின்றாரென்று பாரதி யார் கூறும் மொழிகள் பண்பு வாய்ந்தனவாம். சிலம்பொலி எழுந்த காலத்து, சேர நாடு முத்தமிழ்நாடுகளுள் ஒன்றாய் மிளிர்ந்தமையால், சிலப்பதிகாரம் இயற்றிய கவிஞர், புகழ் பூத்த பொதியமலையைக் குட எல்லையாகக் கூறாது விடுத்தார். ஆயினும் பிற்காலத்தில் தமிழ்த்தாயின் மகவாய்த் தோன்றிய மலை யாளம் என்னும் மொழி, மேற்புலத்தைக் கவர்ந்து கொண்டமையால், பண் ணூர்ந்த பாட்டிசைத்த பாரதியார் முத்தமிழ் முனிவருறையும் முதுமலையை மற்றோ ரெல்லையாகக் குறித்துப் போந்த முறை சாலப்பொருத்த முடைய தாகும். "என்று முள தென்தமிழ் இயம்பி யிசைகொண்ட" குறுமுனிவன் தமிழகத்தின் பெருமை குன்றாது காக்கின்றான் என்று பாரதியார் கூறும் கவிகள் பாடி மகிழத் தக்கனவாம்.

இத்தகைய தெய்வத் திருநாட்டில் பரந்து பாயும் ஆற்றையும், விரிந்து வீசும் காற்றையும், ஆசிரியர் இளங்கோவடிகள் தமிழ் மயமாகவே கண்டு மனந்தழைப்பா ராயினர். அதிராச் சிறப்பமைந்த மதுரை மூதூரில் அழகுறப் பரந்து சென்ற ஆற்றின் பெருமையை,

"புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி"

என்று இளங்கோவடிகள் கூறும் முறை இனிமை சான்றதாகும். பழமுதிர் சோலைகளினிடையே நெளிந்து வளைந்து சென்ற வையையாற்றைப் 'பூங் கொடி என்று புலவர் புகழ்ந்துரைத்தார். பழந்தமிழ்ப் புலவர்கள் பரிபாட லில் அமைத்துப் பாராட்டும் பண்பு வாய்ந்த வையையாற்றைப் "புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி" யென்று போற்றினர். ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அருங்கோடை காலத்தும் ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் உய ரிய நலம் வாய்ந்த உயிர் ஆற்றைப் "பொய்யாக் குலக்கொடி" என்று வாயா ரப்புகழ்ந்து வாழ்த்தினர். இவ்வாறே மதுரைமாநகரில் வீசிய மெல்லிய பூங்காற்றை,

"மலயத் தோங்கி மதுரையின் வளர்ந்து
புலவர் நாவிற் பொருந்திய தென்றல்"

என்று புலவர் புகழ்ந்துரைத்த நயம் அறிந்து போற்றுதற் குரியதாகும். இவ்வ

ணம் தமிழ்நாட்டின் ஆற்றையும் அருங்காற்றையும் புகழ்ந் துரைத்த புலவர் பெருமான், தமிழகத்தில் வைத்த தலையாய ஆர்வத்தால், கொடுமை செய்த கருங்கடலைக் குறை கூறுகின்றார். குமரி முனைக்குத் தென்பாலமைந்த திருந்திய தமிழ்நாட்டைக் கவந்தன்போற் கவர்ந்து விழுங்கிய கருங்கடலின் கொடுமையை நினைந்து மனந்தளர்ந்த கவிஞர்,

"வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளியாற்றுடன் மன்மலை யடுக்கத்துக்
குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள"

என்று குழைந்து கூறும் மொழிகள் கூர்ந்து அறியத்தக்கனவாம். பெருந் தமிழகத்தின் தென்பா லமைந்தநாடும், காடும், ஆறும், மலையும் ஆழிவாய்ப் பட்டு அழிந்த கதையைக் கேள்வியுற்ற அடிகளார் உள்ளம், அனலிடைப் பட்ட மெழுகுபோல் உருகிற்று. அடுக்கடுக்காக ஓங்கி யுயர்ந்த மலையையும், அம்மலையின் குடுமியாய்த் திகழ்ந்த குமரி என்னும் கோட்டையும், அக்குன்றி னின்றும் இழிந்து பரந்து பாய்ந்த பஃறுளி என்னும் ஆற்றையும் வாரி யெடுத்து வயிற்றி லடக்கிய ஈரமற்ற நெடுங்கடலைக் 'கொடுங்கடல்' என்று அருள்சாலடிகள் நெஞ்சம் குமுறிக் குறிக்கும் முறை கற்போர் கருத்தைக் கவர்வதாகும்.

## படிப்புக்கு முதுகொடிப்பு



ஒரு தாழ்த்தப்பட்டவர் தமது மகனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக் கொள்ளுமாறு வேண்டுகிறார். தீட்டுப்பட்டு விடும் என்று ஆசிரியர் வெருட்டுகிறார். "எல்லாரும் ஒன்று என்னும் காலம் வந்தது" உண்மையா?





# ஆல்ப்ரெட் மஹாராஜன் கதை



(டி. எஸ். ராஜகோபாலன், பி.ஏ., எல்.டி.)

கிறிஸ்தவ மதத்தை அனுஷ்டித்த ஆங்கிலோ சாக்ஸனியருக்கு மத அனுஷ்டானத்தினால் மூர்க்க குணம் ஒழிந்தது. சகோதரத் தன்மை உண்டாயிற்று. ஆஸ்திக புத்தியும் ஒற்றுமை யுணர்ச்சியும் ஏற்பட்டன. இவ்வளவுக்கும் காரணமாக இருந்தவர் தியோடார் ஆப் தார்ஸஸ் (Theodore of Tarsus) என்ற ஆங்கிலோ சாக்ஸனிய மதகுரு. ஆங்கிலோ சாக்ஸனியர் முதல் முதலில் மத குரு ஸ்தானத்தை ஏற்படுத்திய காண்டர்பரி (Canterbury) மாதா கோவிலிலுள்ள மத குரு பிரதான மத குருவாகி, அவரே இன்றளவும் பிரதம இங்கிலாந்து மத குருவாக விளங்குகிறார். இதர மாகாண மத குருக்கள் இந்த ஆர்ச் பிஷப் ஆப் காண்டர்பரிக்கு அடங்கினவர்களாக அவருடைய அப்போதப்போதைய உத்திரவுகளை நிறைவேற்ற வேண்டுமென ஏற்பாடாயிற்று. இதனால் மத சம்பந்தமாக ஆங்கிலோ சாக்ஸனியர் காண்டர்பரி மத குருவுக்கடங்கி நடக்க வேண்டுமென நிர்ணயமாகி, ஐரோப்பாவுக்கெல்லாம் பிரதான பெரிய மத குருவான (Pope) போப் எல்லாரையும் நடத்துபவரானார். இதனால் ஐரோப்பிய இயக்கங்களிலும் இங்கிலாந்துக்குப் பங்கு ஏற்பட்டு அபிவிருத்தியடைய ஹேதுவாயிற்று.

இங்கிலாந்தில் இருந்த சப்த ராஜ்யங்களில் ஒன்றுக்கொன்று பிரதான ஸ்தானத்திற்கு போட்டி ஏற்பட்டு, கொஞ்சகாலம் நார்த்தம்பிரியா அரசன் அப்பதவியிலிருந்தான். பிறகு மெர்ஷியா அரசன் அப்பதவியை அடைந்தான். அதன்பிறகு ஈஸ்ட் ஆங்கிளியா மன்னன் பிரதானமானவனானான். நம் கதை நடக்கும் இச்சமயம் (சுமார் 802 கி. பி.) வெஸ்ஸெக்ஸ் அரசன் எக்பர்ட் என்பான் மிகுந்த பலசாலியாக இருந்தான். அந்த எக்பர்ட் சப்த ராஜ்யாதிபதிகளுக்கும் தலைவனாயிருந்தசமயம், ஆங்கிலோ சாக்ஸனியர் பிரிட்டானியருக்கிழைத்த சகல தீங்குகளும் ஒருருவாய் திரண்டு வந்ததேபோல, டேனர் என்ற மற்றொரு அநாகரிகர் இங்கிலாந்தின்மேல் படையெடுத்து கொள்ளை யடிப்பதும், கொளுத்துவதும், கொல்லுவதும், சிறைபிடித்துக்கொள்ளுவதும், நாசமாக்குவதும், ஓடுவதுமாக வந்து சேர்ந்தனர். "பிறர்க்கின்னா முற்பகல் செய்யில் தமக்கின்னா, பிற்பகல் தாமே விளையும்" என்பதற்கிணங்கியும், "நன்மை விதைத்தால் நன்மை விளையும், தீமை விதைத்தால் தீமை விளையும்" என்பதற்கிணங்கியும், "ராக்ஷதர்களுக்குப் புரோக்ஷதர்களாய்" ஆங்கிலோ சாக்ஸனியருக்கு டேனர்கள் ஏற்பட்டார்கள். இவர்கள், டென்மார்க், நார்வே, ஸ்வீ

டன் என்ற வடகடல் பிராந்தியங்களி லிருந்து வந்ததனுல் "நார்த்மென்" அல்லது வடக்கத்தியர்கள் என்ற பெயரும் உடையவர்கள். அவர்களும் துணிந்து புயலிலும், காற்றிலும், கடலிலும் சென்று கொள்ளை யடிப்பவர்கள். இந்தப் புதிய கொலைகாரர்களை எதிர்க்கும் அவசியத்தினுல் வெஸ்ஸெக்ஸ் அரசன் எக்பர்ட் தலைவனுகி, அவன் ஆங்கிலோ சாக்ஸனிய இங்கிலாந்து பூரா வுக்கும் முதல் அரசனுனன். அந்த எக்பர்டின் இரத்தம் நமது ஐந்தாம் ஜார்ஜ் மகிபர் உடம்பிலும் ஓடுகிறதாம்! அந்த எக்பர்ட்டின் தலைமையில் ஒருவாறு டேனர்கள் திருப்பி யடித்துத் துரத்தப்பட்டார்கள்.

அந்த எக்பர்ட் காலத்திற்குப் பிறகு டேனர்கள் மறுபடியும் தோன்றி துவம்சம் செய்யத் தொடங்கினதால் எக்பர்ட்டின் சந்ததியில் பிறந்த அவரு டைய பேரன் ஆல்ப்ரெட் என்பவரை, நாட்டிலுள்ள பிரபுக்களும் புத்திமான்க ளும் அடங்கிய விட்டன் சபையார் அரசராக்கினர். ஸ்வதந்திரப் பிரியர்களான ஆங்கிலேயர் ஆதிகாலந் தொட்டு, தங்கள் அரசர்களைக் கட்டுப்பட்டு ஆளும் படியே செய்து வைத்து, சந்தர்ப்பங்களில் தங்களுக்கு இஷ்டமானவர்க ளையே அரசர்க ளாக்கியும் வந்தார்கள். அதையொட்டியே, ஆல்ப்ரெட்டுக்கு மூத்தவர்கள் அச்சமயம் இருந்தும், சண்டைகளில் தீரம்காட்டி எதிர்த்து நின்று போராடி, எதிரிகளைத் துரத்திப் புறமுதுகிட் டோடும்படி செய்து புகழ்பெற்ற வீரனுன ஆல்ப்ரெட்டையே அவருக்கு வயது 23-ஆயினும் அரச ராக்கினர்.

இந்த ஆல்ப்ரெட்டின் பால்யத்தைக்கண்ட டேனர்களும் "உருவின் சிறுமை கண்டெள்ளியவர்"களாய்த் துணிந்து கத்ரம் (Guthrum) என்ற தொரு புதிய வீரத்தலைவன்கீழ்ப் படையெடுத்துவந்து கடுமையாகப் போர் புரியலானுர்கள். அவர்களுக்குச் சலிக்காத ஆல்ப்ரெட் அரசனும் தன் வீரர் களை போர்க்களத்தில் திறமையுடன் நடத்திச் சுமார் ஒன்பது சண்டைகளில் மாறி மாறி ஜெயிப்பும், தோல்வியும் அடைந்து, கடைசியில் துரதிர்ஷ்ட வசமாய் தோற்று அதெல்னி என்றதொரு தீவில் சென்று சொற்பகாலம் தலை மறைவாயிருக்க நேரிட்டது. "யானைக்கும் அடி சருக்கும்" என்பது பழ மொழி! காலத்தின் வேகம் யாரைவிட்டது? ஆனுல் "விதி-விதி" என்று புழுங்குவது வீரர்தம் செய்கையாமோ? "யானை படுத்தாலும் குதிரை யவ்வள வுயரம்" இருக்கும் என்பதற் கிணங்கவும், "தக்கோர் தனஞ் சிறியராயினும் மனஞ் சிறியராவரோ?" என்பதற் கிணங்கியும் ஆல்ப்ரெட் மனம் தளர்ந்தா ரில்லை.

தான் ஒளிந்திருந்த அதெல்னி தீவிலிருந்தவண்ணமே, தன் வீரர்களுக்கு எச்சரிக்கைகள் அடிக்கடி யனுப்பியும், மாறுவேடத்தில் அடிக்கடி எதிரிகளுக் கிடையில் நுழைந்து உளவறிந்தும், எப்படியும் தன் ராஜ்யத்தை மீட்டுக் கொண்டு எதிரிகளைத் துரத்திவிட வேண்டுமென்ற எண்ணமே மேலிட்டவ ராய் இராப்பகலாய் ஓய்வொழிவின்றிப் பாடுபட்டுவந்தார். (இந்த ஒரு சந்தர்ப்பந் தான், தான் வசித்துவந்த இடைச்சியின் வீட்டில் ரொட்டியைக் காந்தவிட்டு விட்டதற்காக இடைச்சியால் திட்டப்பெற்றுர் என்ற சிறு கதை கதா வாச கங்களில் காணப்படும்!) மேற்சொன்னபடி ஒரு பாடகனைப்போல் மாறுவேடம் பூண்டு, டேனர் தலைவன் முன்பு சென்று, அழகாகப்பாடிப் பரிசுபெற்று, அந்த டேனர்கள் ஆல்ப்ரெட் ஒழிந்தேபோனுன் என்ற நினைப்பில் ஆடிப், பாடி,

களித்து, உண்டு, குடித்து, வெறிகொண்டிருந்த சமயம்பார்த்து, தன் வீரர்களை ஒன்று சேர்த்து டேனர்களை சிப்பான்ஹாம் என்றவிடத்தில் நன்றாய் முறியடித்து விரட்டினர். அதே வருஷத்தில் 878-ல் டேனர் தலைவன் கத்ரமுடன் வெட்மோர் என்ற இடத்தில் சமாதானமும் செய்துகொண்டார். "காலைச் சுற்றிய பாம்பு கடியாமல் விடாது" என்று அறிந்து, இங்கிலாந்தின் வடக்கு, வடகிழக்கு, வடமேற்கு பாகத்தை டேனர்களுக்குக் கொடுத்து, டேனிலா என்ற அந்த பாகத்தில் வசிக்கச் செய்து, அவர்கள் எல்லோரையும் கிறிஸ்தவ மதத்தைத் தழுவும்படி வற்புறுத்தி, சமாதானமாய் இருக்கச் செய்தார்.

இவ்வாறாக சலிக்காது யுத்தம் நடத்தி ஜெயம்பெற்ற ஆல்ப்ரெட்டு தன்னுடைய அரசியல் திறமையையும் பின்வரும் முறைகளில் காட்டி, உலகமுள்ளளவும் அழியாப் புகழ்பெற்றார் என்பது சொல்லாமலே விளங்கும்.

டேனர்கள் ஒருவாறு தாத்காலீகமாக அடங்கிவிட்டாலும், அவர்களுடைய இயற்கைக் குணம் என்றும் திரும்பிவிடலாம் என்று எதிர்பார்த்த ஆல்ப்ரெட், தன்னுடைய இராஜ்ய எல்லை பூராவிலும் பலமான கோட்டைகளைக் கட்டித் திறமைவாய்ந்த வீரர்களை வைத்துக் காவலுக்கு ஏற்பாடு செய்தார். கடற் கொள்ளைக்காரர்களானதால், தங்கள் தாய்நாட்டிலுள்ளவர்கள் மேலும் தொடர்ந்துவர வழியில்லாதபடி, இங்கிலாந்தின் கரையோரங்களைக் காக்க அநேக யுத்தக் கப்பல்களைக் கட்டியும், கட்டுபவர்களுக்கு நல்ல ஆதரவு கொடுத்தும் வந்தார். தன் பிரஜைகளில் பலருக்கு வீரர் பழக்கமும், ஆயுதப் பழக்கமும், மாலுமிப் பழக்கமும் ஏற்பட, ஆங்காங்கு பயிற்சிக் கூடங்களை ஸ்தாபித்தார். விவசாயிகளுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து, போக்கு வரவுக்குரிய சாதனங்களான சாலைகளையும் பாலங்களையும் பழுது பார்த்து, வியாபார அபிவிருத்தியையும் நாடினர். தன் குடிகளுக்கு, மதாபிவிருத்தியும், கல்வி யபிவிருத்தியும் விசேஷமாக உண்டாகும்படி, நாடு பூராவும் மாதா கோவில்களையும், மடாலயங்களையும், பள்ளிக்கூடங்களையும் ஸ்தாபித்தார். தன் குடிகளுக்கு, தங்கள் ஜனசமூகத்தினிடத்திலும், முன்னோரிடத்திலும் மாறாத அன்பு குறையாமல் இருக்கும்படி "ஆங்கிலோ சாக்ஸனியர் வம்சாவளி" என்ற ஆங்கிலோ சாக்ஸனியருடைய பூர்வ சரித்திர விபரங்களை எழுதுவித்து அது தொடர்ந்து எழுதப்படுவதற்கான ஏற்பாடுகளையும் செய்து வைத்தார். (சரித்திரம் என்ன பயனைக் கொடுக்கலாம் என்பதை ஒருவாறு அன்பர்கள் யூகிக்கலாம். சிவாஜி முதலியவர்களின் வாழ்க்கைப்போக்கிற்கு வீரர் சரித்திரமன்றோ காரணம்.) மேலும் காலநிர்ணயம் தெரியும் மெழுகு வர்த்தி கடிகாரங்களைக் கண்டுபிடித்து எங்கும் உபயோகத்திலிருக்க ஏற்பாடு செய்தார்.

இதுவன்றோ தன் நாட்டைப் பரிபாலிக்கும் உத்தம மன்னன் செய்யும் காரியப்போக்கும், ஆளும் முறையும்! ஆகவே ஆல்ப்ரெட்டுக்கு சரித்திரத்தில் "மஹா ஆல்ப்ரெட்" (Alfred the Great) என்று பெயர் வழங்குவதில் ஏதேனும் வியப்புமுண்டோ?

"பார்தழுவும் நல்வழியிற் பண்பி னரசாண்டிடலே
சீர்பெற்று வாழுந்திறம்"

"அடக்குவதில்லை; அளித்தலே சீர்மை
கொடுக்கும் அமைதியெதிர் கொண்டு"

"குடிகளின் சேவகரே கோக்களெனக் கொள்ளின்
படியினிலேதே பகை"

"பஞ்சம் இருள் நோய்மிடியைப் பல்லாற்றிற் போக்கிடும்
செஞ்செயலின் மன்னே திறம்." (அறநூல்)

இனி அடுத்துவரும் கதையில் குலத்தைக் கெடுக்கும் கோடரிக் காம்பாய் வந்த அழி அரசன் எதல்ரெட் என்பவனைப்பற்றி எழுதுவோம்.



# இது என்ன நியாயம்?



மோட்டார் பெரிய மனிதர்:—"அடே மூட்டாளே! உன் பாட்டன் வீட்டு ரோட்டா என்ன? மோட்டார் வருவதைக் கண்டு வண்டியை விலக்கி ஓட்டக்கூடாதா? என்ன அகம்பாவம்?"

வண்டிக்காரன்:—(தனக்குள்) "இது என்ன நியாயம் ஐயா! மோட்டார் சப்தங் கேட்டுக் காளைகள் மிரண்டன. காளைகள் மிரண்டதால் நானும் விழுந்தேன்—மூட்டைகளும் விழுந்துவிட்டன. ரோட்டு செஸ் கட்டுகிறவன் கிராமவாசியாகிய நானே! என்னைப்போன்ற குடியானவர் கொடுக்கும் வரியிலிருந்தே ரஸ்தா கிராண்டு கொடுக்கப்படுகிறது. இந்த ஐயா என்ன வெட்டி அதிகாரம் செலுத்துகிறார்."

# ஓர் புனைந்துரையின் ஐயநீக்கம்

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

"ஆனந்தபோதினி"யின் கடந்த கார்த்திகை மார்கழி இதழ்களில் எம்மால் வரையப்பட்ட "வாலி மோக்ஷம்" என்னும் கட்டுரையின் சம்பந்தமாக, பங்குனி மாத விதழில் நண்பர் கோபால திருமலை B. A., அவர்கள் 'ஓர் புனைந்துரையும் ஐயமும்' என்னுந் தலைப்பின் கீழ் ஓர் ஐயவினாவிடுத்துத் தம்மையத்தை நீக்குமாறு கேட்டிருக்கின்றனர்.

எமது கட்டுரை நண்பர்க்கு ஐயப்பாட்டை யுண்டாக்கினதற்காக மிகவும் வருந்துகின்றோம். ஆகலின் ஈண்டு நண்பர்க்குண்டான அவ்வையத்தை நீக்க ஒருவாறு முயல்வது நமது கடமை யென்றறிகிறோம். நண்பரின் ஐயுறவை நீக்குதற்கேற்ற சமாதானங்கள் பலவுளவேனும் அவற்றுளிரண்டொன்றை மாத்திர மிங்குக் காட்டுவாம். முதலாவது,

"வாலி மோக்ஷம்" என்னும் அக்கட்டுரை "சமயம் தத்துவம்" என்னும் மகுடப் பகுதியின்கீழ் வரையப்பட்டிருத்தலைக் கவனிக்குமாறு நண்பரைக் கேட்டுக் கொள்ளுகிறோம். அதைக் கவனிக்குமாற்றால் நண்பரது ஐயம் நீங்கலாம். "சமயம் தத்துவம்" என்னும் மகுடப் பகுதியில் அவ்வியாசத்தை வரைந்தமையின் அதன் தலைப் பெயர் 'வாலி மோக்ஷ தத்துவம்' என்றாகிறது. ஆகவே, அதற்கேற்றவாறு சரித்திர நோக்கைவிட்டுத் தத்துவ நோக்கில் செல்ல வேண்டிய தவசியமாயிற்று. இதனை நண்பரும் சரியென்றே ஒப்புக் கொள்ளுவாரென நம்புகின்றோம். அதற்கும் சரித்திரத்தை ஆதாரமாக வைத்தே தத்துவ நெறியிற் செல்லவேண்டிய தத்தியாவசியமாகலின், சரித்திரத்தை யொட்டிச் சில பல பேசி, முடிவில் "இவ்வாறு வெறுஞ் சரித்திரத்தை யறிந்து கோடலாற் பயனின்று; கதையளவில் நோக்கின் 'வாலி செய்தது சரியா? சுக்கிரீவன் செய்தது சரியா? இராமன் செய்தது சரியா?' என்பன போன்ற குழப்பமே யதிகரிக்கும். அதைவிட்டு தத்துவார்த்தமாகப் பொருள் கொள்ளின் யாதொரு குழப்பமுமிராது" என்று கூறித் தத்துவார்த்தங் காட்டினோம்.

மேலும், இராம சரிதையை யாம் கற்பனையெனக் கூறினோமில்லை. ஆனால் சரிதைகளைத் தம் கல்வித் திறத்தால் பல துறைகளிற் சுவைபடக் கூறும் கற்பனைக் களஞ்சியங்களாகிய கவிவாணரின் சொற்சுவை பொருட்சுவைகளைக் கற்றோரும் பண்டிதரும் கண்டு களிக்கட்டும். நாம் அவற்றை மாத்திரம் மாந்திக் களித்திருக்க வேண்டாம். தத்துவத்தை (உண்மைப் பொருளை)க் காண விழைவோர்க்கு அவை அவசியமன்று. அச்சரிதை காட்டும் நீதிகளையும்—தத்துவங்களையும் கண்டு அவற்றைக் கடைப்பிடித்தொழுக முயல்வது இத்தியாதி நூல்களைக் காண்போரது முதற்பெருங் கடமையாம் என்பதையே யாம் வற்புறுத்த விழைந்தாம்.

புராணமிதி காசமெலை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுளவி டத்திவை பிதற்றே" (சசிவன்னபோதம்.)

"புராணங்களும் இதிகாசங்களும் ஆகிய இவையனைத்தையுங்கற்று பிராண பூதமான பரமாத்மாவை அறியாமலுள்ளவிடத்து அவையனைத்தும் பிதற்றலாய் முடியும்" எனச் சசிவன்னபோதம் போதித்தலுங் காண்க. அன்றியும்,

இராமாயணக் கதை கற்பனையோ? அல்லது அதன் தத்துவார்த்தமே கற்பனையோ என்னும் விஷயத்தைப்பற்றி விவாதிக்க நாம் விரும்பவில்லை. அது விஷயமாக எமது உள்ளக் கிடக்கையை ஈண்டுரைக்க வியலாததற்காக மன்னிக்குமாறு நண்பரை வேண்டுகின்றோம்.

நண்பர் இதிகாசங்களை '(1) உண்மையில் நிகழ்ந்தவற்றை அப்படியே அப்பட்டமாகச் சொல்லுதல். (2) உண்மையில் நடந்தவற்றை முதனூலாகக் கொண்டு திருத்தியும் பெருக்கியும் குறைத்தும் வரைதல். (3) பேராசிரியப் புலவனொருவனின் மனோபாவ வன்மையால் சிருஷ்டி செய்யப்பட்ட கற்பனைக் கதைகள்' என மூன்று வகையாக்கி, 'மேற்கூறியவற்றுள் எப்பகுதியில் காகுத்தன் காதையைத் தொகுத்து நோக்கினும், மேற்குறித்த தத்வார்த்தத்தை முக்கிய நோக்கமாகக் கொண்டு வாலி மோக்ஷம் வரையப்பட்டதென்று துணிவதற்கில்லை' எனக் கூறுகிறார். இதைப்பற்றி விவாதிக்க யாம் விரும்பவில்லை என இதுபற்றிய எமது கருத்தை மேலே காட்டியிருக்கிறோம். எனினும்,

இவ்விராமாயணம் (இதன் ஆசிரியர் யாவராயினுமாகுக. கம்பர் இராமாயணத்தின் ஆசிரியரல்லர்; அவர் செய்த ராமாயணம் வழி நூலாகலின். வான்மீகியுமல்லர்—அவர் செய்த இராமாயணம் முதனூலாயினும், நூலுக்கு அவர் ஆசிரியரே யனறிக் காதைக்கு அவராசிரியரல்லர்—நாரதராலுணர்த்தப்பட்டனராகலின். நாரதரும் ஆசிரியரல்லர்; பிரமாவா லுணர்த்தப்பட்டனராகலின். அப்பிதாமகரே பிரதமத்தில் நூறு கோடிய ளவினதாக இராம கதையைச் செய்து நாரதாதி முனிவர்க்குத் தேவலோகத்தில் உபதேசித்த மாத்திரத்தோடு நில்லாமல், அந்த நாரதரை வான்மீகி முனிவர்பாலனுப்பி இராம சரிதையை உபதேசிக்குமாறு கட்டளையிட்டுத் தாமுமவர்க்குக் காட்சி தந்து இராமாயண மியற்றுமாறு கட்டளையிட்டாரென்பது இராமகாதையின் வரலாறு. பிதாமகரும் இராமாவதாரத்திற்கு முன்னரே இதனைச் செய்தாரென்றும் கூறுப.) என்னும் இதிகாசம் பிரபு சம்மிதம் சுகிருத் சம்மிதம் காந்தா சம்மிதம் என்னும் நூற்பகுப்புக்கள் மூன்றனுள் காந்தாசம்மிதமாகச் செய்யப்பட்டதென்பது திண்ணம்.

வேதம் பிரபு சம்மிதத்தின்பாற்பட்டது; பிரபுவைப்போல் 'இதைச் செய், இதைச் செய்யாதே' எனக் கட்டளையிட்டு, அக் கட்டளைக் குட்பட்டு நடப்பார்க்கு நன்மையும் நடவார்க்குத் தீமையும் விளைத்தலாம். புராணம் சுகிருத் சம்மிதத்தின்பாற்பட்டது; இன்சொலியம்பி நல்வழிப்படுத்தும் நண்பன்போல், முன்னோரின் சரிதைகளைக் கூறுமுகத்தான் நல்லொழுக்கத்தைப் புகழ்ந்தும் தீயொழுக்கத்தை இகழ்ந்தும் கூறி யாவர்க்கும் நல்வினையில் விருப்பும் தீவினையில் வெறுப்பும் உண்டாக்குவதாயிருத்தலால் இதிகாசம் காந்தாசம்

மிதையின்பாற்படும்; பார்வை அல்லது முகக் குறிப்பினாலேயே காதலனைத் தன் விருப்பு வெறுப்புகளிற் செலுத்தும் காதலிபோல, சரிதையைக் கூறுதல் வாயிலாக 'இவர்களைப்போலிருத்தல் வேண்டும்; இவர்களைப்போலிருத்தலாகாது' என்னும் நீதிகளைப் குறிப்புப் பொருளாகக் கூறிச் செல்லுதலால்' எனவே, ஆக்கியோன் கருத்து யாதாயினும் சரிதையின் கருத்து தன்னை மாத்திர முணர்த்தவேண்டு மென்பதன்று; தன்னை யுணர்த்துதல் வாயிலாக நல்லொழுக்கத்தையும் நீதிகளையும் உணர்த்துதல் வேண்டுமென்பதே அதன் நோக்கமாமென்பது வெளிப்படை. ஆகவே, உபலக்ஷணத்தால், தத்துவத்தை யுணர்த்துவதும் அதன் நோக்கமாமென்று கூறுதல் குற்றமாமென்று எமது சிற்றறிவிற்குத் தோன்றவில்லை; ஒழுக்கம், நீதி முதலியவற்றோடு தத்துவம் மாறுபாடுடையதன்றுமாகலின். தவிர,

இராமாயணம் ஒன்றிரண்டல்ல; அனேக முள. அவற்றுள் தத்துவ சங்கிரக ராமாயணமு மொன்றாகும். இதற்கும் ஆசிரியர் வான்மீகியே யாவர். ஆகவே, இராமாயணத்திற்கு தத்துவார்த்தமும் அல்லது அந்தரார்த்தமும் உளதென்னு மிவ்வுலகு வேதாந்தபரமாகப் பொருள் கொள்வோர் அல்லது தத்துவ ஆராய்ச்சியாளர் தத்துவத்தையே முக்கியமென மொழிதல் இயல்பே. இவ்வாறு கூறுதலால் நாம் தத்துவ ஆராய்ச்சியில் வல்லுநரென்று தற்பெருமை கொண்டு பேசுவதாக நினைத்துவிடாதிருக்குமாறு கேட்டுக் கொள்ளுகின்றோம்.

சுருக்கமாக முன்னர் கூறியதுபோல், 'தத்துவம்' என்னும் மகுடத்தின் கீழ் வரைய நேர்ந்தமையின், அதனையே முக்கியமாகக் காட்டி வரைந்தோம் என்பதே நண்பர்க்குப் போதிய சமாதானமாகும் எனக் கருதுகின்றோம்.

1932-ஏப்ரல் 11-திங்கட்கிழமை வெளியான 'சுதேச மித்திர'னில் 'ஸ்ரீராமநவமி'' என்னும் தலைப்பில் எம். ஆர். ஆச்சார் அவர்கள் பின் வருமாறு எழுதி யிருத்தலுங் காண்க.

"இராமாயணத்திற்கு ஸ்தூலார்த்தமும் சூட்சமார்த்தமும் உண்டு. ஸ்தூலார்த்தந்தான் இராமாயணக் கதை. சூட்சுமார்த்தம், அல்லது வேதாந்த அர்த்தம், அல்லது தத்துவார்த்தமும் உண்டு. இவைகள் இரண்டில் சூட்சுமார்த்தம், அல்லது வேதாந்த அர்த்தம், அல்லது தத்துவார்த்தத்தைத்தான் அறிய வேண்டும். இரண்டுவித அர்த்தமும் உண்மையே யென்றாலும், வேதார்த்தம் அல்லது தத்து வார்த்தந்தான் சிறந்தது. அதை அறிந்து கொண்டால் ஞான, பக்தி, வைராக்கியம் ஏற்படும். அவைகளின் துவாரா முத்தி கிடைக்கும். அனைவர்க்கும் சூட்சுமார்த்தத்தை விளக்கிக்காட்டி, பாமரர்களின் புத்தியை விசாலமாக்கி, அவர்களுக்கு ஞானோதயம் உண்டாகுமாறு செய்வார்களாக."

"ஓர் புனைந்துரையும் ஐயமும்" என்னும் கட்டுரையில் நண்பர் கோபால திருமலை B. A., அவர்கள் எம்பால் சிறிது மில்லாதவற்றை யேற்றி எம்மைப் புகழ்ந்து கூறி யிருப்பதற்காக நண்பர்க்கு எமது நன்றி யறிவும் வந்தனமும் உரிமை.



# விசித்திர விநோதம்





### "நல்ல மருந்து"

டாக்டர்:—"இன்றைக்கு உங்கள் முகம் மிகுந்த மலர்ச்சியாயிருக்கின்றதே—இல்லையா?"

நோயாளி:—"ஆமாம்! மருந்து புட்டியின் மீது எழுதியிருந்தபடியே செய்தேன்."

டாக்டர்:—"என்ன எழுதியிருந்தது."

நோயாளி:—"புட்டியைக் கெட்டியாய் மூடிவைத்திருக்கவும்" என்று எழுதியிருந்தது.

***

### "முதல் வேலை"



மாமன்:—"அடே! ராமு! நான் இப்பொழுது நூறு ரூபாய் உனக்குக் கொடுத்தால் அதை நீ என்ன செய்வாய்?"

ராமு:—"நானா? முதலில் ரூபாய் சரியாய் இருக்கிறதா என்று எண்ணிப் பார்ப்பேன்.

***

மனைவி:—"நான் வாங்கிக் கொண்டு வரச் சொன்னதை மறவாமல் வாங்கி வந்தீர்களா?

புருஷன்:—"மறந்து போக வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் மறந்து போவதற்கு மறந்து போனேன்.



"பொருத்தமான காரணம்"

ஒரு பெண்:—"என்னப்பா! பால் வெறுந் தண்ணீராய் இருக்கிறதே."

பாற்காரன் :—" அப்படியா அம்மா? நான் என்ன செய்வேன்? இந்தப் பாழாய்ப்போன மாடுகள் வெய்யிலின் கொடுமையால் ஏராளமான தண்ணீரைக் குடித்து விடுகின்றன."

***

பையன்:—"பெரிய புத்திசாலி என்றால் அர்த்தம் என்ன அம்மா?"

தாயார்:—"பெரிய புத்திசாலி என்றாலா? பெரிய புத்திசாலி என்றால் மிகவும் அறிவுடையவன்—கெட்டிக்காரன் என்று அர்த்தம் கண்ணே!"

பையன்:—"அப்படியானால் நான் பெரிய புத்திசாலி—எங்கள் வாத்தியார் சொல்லி யிருக்கிறார்."

தாயார்:—(சிரித்துக் கொண்டே) "நீ என் மகன் அல்லவா? பெரிய புத்திசாலியே!—வாத்தியார் என்ன என்று சொன்னார்?

பையன்:—"நான் புதுமைகளைக் கண்டு பிடிப்பதில் பெரிய புத்திசாலி என்றார்."

தாயார்:—"நீ என்ன புதுமைகளைக் கண்டுபிடிப்பதாகச் சொன்னார்?"

பையன்:—"வகுப்பில்—மொழிகளை உச்சரிப்பதில் புதிய வழிகள்."

***

"சுகவாழ்வு"

கைதி :—"எஜமானே! நான் திக்கற்றபாவி. எனக்கு நெடுநாளாக வீடு வாசல் கிடையாது—சாப்பாடு கிடையாது. சிநேகிதர் கிடையாது—ஏழை மேல் தயவு வைத்து மனமிரங்க வேணும்."



நீதிபதி:—"ஓ! அப்படியா? நான் உண்மையில் உன் விஷயத்தில் பரிதாபப்படுகிறேன்—வீடு—சாப்பாடு—சிநேகிதர் சகவாசம் முதலியவை நீ 9-மாத காலம் அநுபவிக்க உத்தரவிடுகிறேன்."



### "சரியான பதில்"

வாங்கவந்தவர் :—" நீங்கள் படத்தில் விளம்பரம் செய்திருக்கிறபடி சைக்கிளுடன் விளக்கும் மணியும்கூட ஏன் கொடுக்கக் கூடாது?"

விற்பவர்:—" நல்ல நியாயம்! அப்படியானால் படத்தில் காட்டியபடி ஒரு அழகிய 'லேடி' யையுங்கூட நீங்கள் கேட்டுவிடுவீர்கள்போல் தெரிகிறதே."

***

நண்பர்:—(சினிமாக் கொட்டகையில் நுழையும்போது) "என்ன ஐயா! இங்கே ஒரு தமாஷ் பார்த்தாயா? யாரோ ஒருவன் நீண்ட நேரமாய் நம்மிருவரையும தொடர்ந்து கொண்டே வருகிறானே! அவன் யார்? அவனுக்கு என்னவேலை?

பெரிய மனிதர்:'—'அதோ அந்த அழுமூஞ்சியா? கண்கள் குழிந்து—கிழிந்த கோட்டு மாட்டிக்கொண் டிருக்கிறானே அவனா? அந்தச் சோம்பேறிப் பையலைப்பற்றி நீ கவலைப்படாதே—அவன்தான் நாம் உள்ளே நுழையப் பணம் கொடுத்தவன்."

***

### "போலீஸ் திறமை"



மிராஸ்தார்:—" ஐயா! காணமற் போய் விட்டதாக நான் தங்களிடம் நேற்று ரிப்போர்ட் செய்திருந்த பணப்பை கிடைத்தது. அது என் பெட்டியிலேயே வேறு அறையில் கிடந்தது. காணமற் போய்விட்டது என்று ரிப்போர்ட் செய்தற்காக மிக வருந்துகின்றேன்."

போலீஸ் அதிகாரி:—"அது முடியாது. ஏன் நீஙகள் உடனே தெரிவித்திருக்கக் கூடாது? மிகவும் தாமதித்து வந்து சொல்லுகிறீர்களே. நாங்கள் உடனே திருடனைக் கண்டு பிடித்து இங்கே ரிமாண்டில் வைத்திருக்கிறோம்.

***

பெரியவர்:—"நான் மிகவும் வருந்துகிறேன்—என்னுடைய காரை எவனோ திருடிக்கொண்டு போய்விட்டான்."

நண்பர்:—"அப்படியா? ஏன் போலீஸுக்குத் தெரிவிக்கக்கூடாது?"

பெரியவர்:—"நான் அதை இழந்துவிட்டதைக் குறித்துச் சிறிதும் கவலை கொள்ளவில்லை. திருடினவன் அதை எப்படி நடத்தினான் என்றே ஆச்சரியப்படுகிறேன்."

***

"திண்டாட்டம்"



பையன்:—"அப்பா! நீங்கள் உண்மையைச் சொல்லுங்கள். தாத்தா இறந்த பிறகுதானே சுருட்டுப் பிடிக்கப் பழகினீர்கள்?"

தகப்பன்:—"........."

பையன்:—"என்னப்பா பேசவில்லை?"

தகப்பன்:—"போடா முட்டாள்"

***

"என்னுடைய புதிய ஜாக்கெட் எப்படியிருக்கிறது? இது என் சொந்த சம்பாத்தியம்."

"அதெப்படி?"

"என் புருஷனுக்குக் காப்பியின் கெடுதல் எடுத்துக்காட்டி—அதைக் குடிக்காமலிருக்கும் பயிற்சியை அவருக்குக் கொடுத்தேன்."

***

"செவிடு"



டாக்டர்:—"தங்களுக்கு நன்றாய்க் காது கேட்கும்படி செய்ததற்கு ரூ. 50—சார்ஜ் பண்ணியிருக்கிறேன்."

செவிடாயிருந்தவர்:—"டாக்டர்வாள் தாங்கள் சொல்வது எனக்குக் கேட்கவில்லையே"

டாக்டர்:—"சார்ஜ் ரூ. 25 என்று சொன்னேன்."

செவிடாயிருந்தவர்:—"ஓ! அதற்கென்ன இப்போது நன்றாய் கேட்கிறது."

# ஸ்ரீ வேமன சுவாமிகள் பாடல்

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

கற்சிலைக் கேனே பகட்டு நிறவாடை
பொற்பான கோயிலும் கோபுரங்கள்—நற்கும்பம்
சோறு துணிகளைக் கோருமோ தெய்வந்தான்
வீரவபி ராமவே மா.

(கருத்து) மூடர்கள் கல்லினால் பொம்மை செய்து வைத்து அதற்குக் கண்களைப் பகட்டக்கூடிய பல நிறங்களையுடைய ஆடைகள் கட்டுவார்கள். அழகான கோயிலும் கோபுரங்களும் கட்டுவார்கள். எதிரில் கும்பம் (சோற்றுக் குவியல்) கொட்டுவார்கள். இவைகளெல்லாம் கற் பதுமைக்கேன். தெய்வம் சோற்றையும் துணியையும் விரும்பி நிற்குமோ ! இது என்ன அறியாமை

செங்கருப்பஞ் சோலைக்குள் செத்தை கிடந்தாலும்
பொங்கு மதன்குணந்தான் போகாதாலிங்கிதமாம்
ஞான முளவிடத்தே துட்டனிருத் தல்மானும்
ஞானசொ ரூபவே மா.

(க—து) செழுமையான கருப்பஞ் சோலைக்குள் செத்தை குப்பைகள் எவ்வளவு கிடந்தாலு மென்ன! அதனால் கரும்பின் குணம் மாறிவிடுமோ! மாறாது. அதுபோல, மேன்மைபொருந்திய ஞானிகள் மூடர்களுடன் சேர்ந்திருந்தாலும் அவர்கள் குணம் சிறிதும் மாறிவிடாது.

நிசம்பேசு வோன்காண் நிருமலனே யாவான்
நிசம்பேசு வோனீதி வானும்—வசையில்
நிசத்தையே பேசாதோன் நீசசண்டாளன்
நிசத்தின்சொ ரூபவே மா.

(க—து) இவ்வுலகத்தில் உண்மை பேசுவோனே பரிசுத்தான்மாவாவான். அவனே நீதிவானுவான். குற்றமற்ற உண்மை பேசாதவன் இழிவான சண்டாளனுவான்.

தனுவுளே யங்கி தகவா யொளிர
பினுங்கொளுத்திக் கொள்ளுவதென் கன்மந்—தனக்கோ
கொளுத்திக்கொண் டாலவனும் கூறுயர்வா வானே
அனிமிகு பொற்பவே மா.

(க—து) தனது இதயத்திற்குள்ளே தானே அக்கினியானது பிரகாசித்துக்

கொண்டிருக்க, மீண்டும் உடலை முத்திரை போட்டுக்கொள்ளுகிறே னென்று சுட்டுக்கொள்ளுவ தென்ன கர்மம்? அவ்வாறு கொளுத்திக்கொள்வதனலவன் உயர்ந்தோ னவானே? ஆகான்.

கன்னிவான் கூடிக் கலங்குங்கா லேசர்போது
பின்னமிலா மூத்திரத்தாற் பிண்டந்தான்—நன்னயமாய்
உற்பவமாம் ஓரினெவன் மேற்குலத்தோன் ஈனனெவன்
விற்பனவி வேகவே மா.

(க—து) ஓர் மாதும் புருடனும் ஒருவரை யொருவர் காதலித்துக் கூடும் பொழுது வெளிப்படும் சுக்கில சோணிதங்களால் ஓர் காலத்தில் மாமிச பிண்டமாகிய இவ்வுடல் உண்டாகின்றது. இத்தகைய உடலையுடையோரில் உயர்ந்தோ ரெவர்? தாழ்ந்தோரெவர்? இவ்வுடலில் உயர்வதாழ்வு கற்பித்தல் மடமையேயாம்.

கடையக் கடையப் பிறக்குமாத் தங்கி
கடையக் கடையவுண் டாந்ததியில் வெண்ணெயே
எண்ணவெண் ணப்பிறக்கும் தன்னுளே தத்துவமே
அண்ணலபி ராமவே மா.

(க—து) கட்டையைக் கடையக் கடைய நெருப்புண்டாகும்; தயிரைக் கடையக் கடைய வெண்ணெயுண்டாகும். அதுபோல, தன்னை விசாரிக்க விசாரிக்கத் தன்னுள்ளே தத்துவமுண்டாகும்.

அண்டை யயலா ருஞ்செல்வந் தன்னையே
கண்டுதமக் கில்லையெனின் காரியமென்—பண்டு
தருமமென் றுழுதைத்துக் கொண்டு மடிந்தாரே
தருமசொ ரூபவே மா.

(க—து) அக்கம்பக்கத்தாரின் செல்வத்தைக் கண்டு ஐயோ! அவர்கள் அவ்வளவு பணம் வைத்திருக்கின்றார்களே! நமக்கில்லையே! என்று வருந்துவதாற் பயன் யாது? முற்பிறவியில் தருமஞ் செய்யுங்கள். அதுதான் கூடவரும். மறுமையிலுதவும் என்று பெரியோர் சொன்னால் அதைக் கேளாமல் தருமம் என்றவளவில் உதைத்துக்கொண்டு செத்தார்களே! இப்போது எப்படி கிடைக்கும். கொடுத்து வைத்தவனுக்கல்லவா கிடைக்கும்!

குலமிலான் செல்வத்தால் கூவி விலகும்
குலந்தாழும் செல்வமிலா னுக்கே—குலத்தினும்
ஆராயின் செல்வமே லாகுமே முக்கியம்
சீரவபி ராமவே மா.

(க—து) தனக்கென வோர் குலமில்லை யென்னுமாறு இழிகுலத்தோனயிருப்பினும் செல்வமுடையவனயிருப்பானயின் அவன் இவ்வுலகத்திற் புகழ்பெற்று விளங்குவான். உயர்ந்த குலத்தினனயினும் செல்வமில்லாதவனயின் அவன்

இழிகுலத்தோனுவன். ஆகவே, குலத்தினும் செல்வமே மிக முக்கியமான தாகும்.

நாளுமுப் போதுண்டும் நன்று யுறங்கியும்
வேளம்பிற் காளாகி வேசையர்பால்—மீளாத
காதல்வைத் துச்சேர்ந்தும் காசை யழிக்காதே
தீதாகு மென்றும்வே மா.

(க—து) நாடோறும் மூன்று வேளை தவருமல் சாப்பிட்டுக் கொண்டும் நன்ருகத் தூங்கிக்கொண்டும், காமியாய் வேசிகளிடத்து நீங்காத அன்புவைத்து அவர்களிடத்தே தானே தங்கியும் செல்வத்தை வீணுகச் செலவழிக்காதே. பாடுபட்டுப் பணந்தேடிச் சேர்ப்பதில் கருத்துடையவனுயிரு.

பார்ப்பனர்க் குச்சகல பாக்கியமு மீதலாம்
சீர்த்தி யுடன்மேன்மை செய்தலாம்—சேர்தலாம்
ஞான மருளியே மாந்தர்க் கடைத்தேற்றின்
ஞான சொரூபவே மா.

(க—து) அந்தணர்கள் மற்றவர்களுக்கு ஞானேபதேசம் செய்து அவர்களைக் கடைத்தேற்றுவதையே தம்முடைய முக்கிய தொழிலாகக் கொண்டிருப்பார் களானுல் அவர்களுக்குச் சகல பாக்கியங்களுங் கொடுக்கலாம். சீர்த்தியுடன் எல்லாச் சிறப்புக்களையுஞ் செய்யலாம். அவர்களுடன் கூடியுமிருக்கலாம்.

அன்னைக் கெதிர்பேச லச்சற்கெதிர்பேசல்,
முன்னேர்க் கெதிர்பேசல் மூன்றுமிவை—எந்நாளும்
பாதக மென்றோர்ந்து பாரிலுறைகவே
வேத வடிவவே மா.

(க—து) தாயை எதிர்த்துப் பேசுதலும் தந்தையை எதிர்த்துப் பேசுதலும் மூத்த சகோதரனை எதிர்த்துப் பேசுதலும் ஆகிய இம்மூன்றும் கொடிய பாவ காரியங்களாதலின் இக்குற்றங்கள் நேராதவாறு எச்சரிக்கையோடிருத்தல் வேண்டும்.

கொல்லப் படத்தகும் கூடாரும் கைப்படின்
ஒல்லாது தீமை யுளுற்றலே—நல்லவை
செய்தவனைப் போவென்னச் செப்பலே சாலுமே
துய்யவபி ராமவே மா.

(க—து) கொல்லப்படத்தகுந்த கொடிய பகைவர்களாயிருப்பினும் நம்மிடத் துச் சிக்கிக்கொள்வார்களாயின் அவர்களுக்கு ஒரு தீமையும் செய்யலாகாது. அவர்களுக்கு வேண்டிய நன்மை செய்து அனுப்பிவிடுவதே போதுமானது.

இன்னு செய்தாரை ஒறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

என்னுங் குறளின் பொருளை ஈண்டு நோக்குக.

# ஆசிரியர் குறிப்புக்கள்.

### "குழந்தை மணம் குற்றம் அல்ல"

குழந்தை மணக் கொடுமைகளைக் கண்டு சகியாத ஸ்ரீமான் ஹரிவிலாச சாரதா அவர்கள் இந்திய சட்ட சபையில் குழந்தை மணத்தடை மசோதா ஒன்று கொணர்ந்து அதைச் சட்டமாகச்செய்வித்தார். இது சாரதாச் சட்டம் என்று வழங்கப்படுதல் எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இந்தச் சட்டம் அமலுக்குவந்த நாள் முதல் வைதிகர் மதம் போச்சு—ஜாதி போச்சு—சாஸ்திரம் போச்சு என்று கூச்சல் போட்டுக்கொண்டே இருக்கின்றனர். குழந்தைகளைப் பிடித்துள்ள பொல்லாத கிரகத்தால் குழந்தைகளின் வாழ்க்கை நலம் ஆச்சு என்ற கூச்சல் வலிமை அடையவில்லை. வைதிகக் கூச்சலைக் கண்டு அஞ்சிய அரசாங்கத்தாரும் சாரதாச் சட்டத்தை சக்களத்தி பிள்ளையாகப் பாவிக்கத் தொடங்கிவிட்டனர். இது காறுது—சாரதாச் சட்டத்தையே இருந்தவிடம் தெரியாமல் செய்துவிடவேண்டும் என்பது வைதிகரின் பேராவல். இந்தியா சட்ட சபையில் இதற்குரிய முயற்சிகள் நடைபெறவும் ஏற்பாடு செய்யப்பட்டது. இந்நிலையில் "கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தமாதிரி" நமது வைதிகப் பெரியார்கட்கு கல்கத்தா ஹைக்கோர்ட்டுத் தீர்ப்பு ஒன்று கிடைத்துவிட்டது. தடையுத்தரவையும் மீறி 14 வயதுக்குக் கீழ்ப்பட்ட ஒரு பெண்ணுக்கு மணம் செய்து வைத்தமைக்காக வங்காளத்தைச் சேர்ந்த பேக்கர்கஞ்ச் ஜில்லா நீதிபதி அந்த மணப் பெண்ணின் தந்தைக்குத் தண்டனை விதித்தார். ஜில்லா நீதிபதியின் தீர்ப்பை ரத்துசெய்ய வேண்டும் என்று கல்கத்தா ஹைக்கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்யப்பட்டது. பார்லிமெண்டில் 1780-ம் ஆண்டில் நிறைவேறிய கிழக்கிந்திய கம்பெனிச் சட்டமும் 1797-ம் ஆண்டில் நிறைவேறிய 'கிழககிந்திய கம்பெனிச் சட்டமும் இன்னும் ரத்து செய்யப்படாமல் உயிரோடிருக்கின்றன என்று வாதிக்கப்பட்டதாம். இவ்வழக்கை விசாரித்த ஹைக்கோர்ட் நீதிபதிகள் ஜில்லா நீதிபதியின் தீர்ப்பை ரத்து செய்துவிட்டார்களாம். இத்தீர்ப்பைக் கண்டு வைதிகர் மனம் களிக்கூத்தாடும் என்பதில் ஐயம் இல்லை. இந்தத் துருப்பிடித்த சட்டத்தை ஸ்ரீமான் ஹரிவிலாஸ் சாரதா முதலியவர்கள் ஏன் முன்னரே கவனிக்கவில்லை? இனிமேலேனும் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களாக. பம்பாய்த் தீர்ப்பு ஒன்று சாரதா சட்டத்திற்கு உதவியாகக் கிளம்பியிருப்பது மகிழ்ச்சிக்குரியது.'

### 47—வது காங்கிரஸ்

புண்ணிய க்ஷேத்திரமாகிய பூரியில் நடக்கவிருந்த 47—வது காங்கிரஸ் மகாசபை சென்ற ஏப்பிரல் மாதம் 24-ம் தேதி டில்லியில் நடத்திவிடப்பட்டது. இதற்கு ஏற்பாடு செய்தவர்கள் கவியரசி சரோஜனி தேவியாரும் பண்டித மதன்மோஹன் மாளவியாவும் ஆவார்கள். 47-வது காங்கிரஸுக்கு மாளவியாஜி தலைமைவகிக்க இருந்தார். கவியரசியும் இவரும் முன்னேற்பாடாகக் கைது செய்யப்படவே ஆமதாபாத் மில் முதலாளி ஸ்ரீமான் ரஞ்சோடி தாஸ் அமிர்தலால் அவர்களின் தலைமையின் கீழ் டில்லி மணிக்கூண்டுக் கருகில் வெட்ட வெளியில் சபைகூடியது. உடனே போலீசார் கூட்டத்தி

விருந்தவர்கள் எல்லோரையும் கைதுசெய்துவிட்டனர். பல்வேறு இடங்களிலும் இந்தக் காங்கிரஸ் சம்பந்தமாகச் சுமார் ஆயிரம் பேர்கட்குமேல் சிறையில் அடைக்கப்பட்டனர். இப்பொழுது மாளவியாஜி முதலியவர்கள் விடுதலை செய்யப்பட்டிருக்கின்றனர். இவ்வாண்டின் காங்கிரஸ் அரசாங்கத்தாரின் அடக்குமுறைகளும், தடியடிகளும், துப்பாக்கிப் பிரயோகங்களும் நாட்டு மக்களின் உணர்ச்சியை அடக்கும் வலிமையைப் படைக்கவில்லை என்னும் உண்மையை நன்கு நிரூபித்துவிட்டது.

## ஷேக்ஸ்பியர் திருநாள்

சென்ற மாதம் ஆங்கில மகாகவி ஷேக்ஸ்பியரின் திருநாள் அவரது பிறப்பிடமாகிய ஸ்ட்ராட்போர்டு என்னும் ஊரில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அப்பொழுது எழுபது நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் போயிருந்தார்களாம். வேல்ஸ் இளவரசரும் விஜயம்செய்திருந்தாராம். இவர் அங்கு ஆவன் ஆற்றங்கரையில் கட்டப்பட்டுள்ள ஷேக்ஸ்பியர் ஞாபகார்த்த நாடகசாலையைத் திறந்துவைத்தார் என்றும் தெரிகிறது. நமது தமிழகத்தில் தமிழுக்கும் தமிழ்ப் புலவர்கட்கும் எத்தகைய மதிப்பு இருந்துவருகிறது என்பதைச் சற்றே சிந்தித்துப் பார்க்குமாறு நேயர்களை இச்சந்தர்ப்பத்தில் வேண்டுகின்றோம்.

## தீவினை இயக்கம்

நமது நாட்டில் இப்பொழுது ஒரு புதிய இயக்கம் தோன்றியிருக்கிறது. இதற்குத் தீவினை இயக்கம் என்று பெயர் கொடுத்தல் மிகமிகப் பொருந்தும். சென்னை, பம்பாய், கல்கத்தா, அலகாபாத் முதலிய நகரங்களில் யாரோ சிலர் தபால் பெட்டிகளில் தீ வைக்கத் தொடங்கியிருக்கின்றனர். ரயில் பகிஷ்காரம், தபால் பகிஷ்காரங்களை விரும்பும் காங்கிரஸ்காரரே இவ்வாறு செய்து வருவதாகப் பெரிய வதந்தி உலவுகிறது. உண்மைக் காங்கிரஸ்காரர் இத் தீத் தொழிலில் இறங்கமாட்டார்கள் என்பதே எமது துணிவு. ஆனால் இந் நஷ்டம் சர்க்காருக்கு அல்ல நமக்கே என்னும் உண்மையை ஏன் இத்தீவினையாளர் உணரவில்லை?

## திருவாங்கூர் வைதிகம் கரைகிறது

கடற் பிரயாணம் அவைதிகம் என்று நமது சாஸ்திரங்கள் முழங்குகின்றன. ஆனால் நமது தமிழகத்தில் அக்கொள்கை அநேகமாய்த் தேய்ந்துவிட்டதென்றே கூறவேண்டும். இதுகாறும் திருவாங்கூர் ராஜ்யத்தில் கடல் கடந்து அந்நிய நாடு சென்று மீண்டவர்கட்குக் கோவில் பிரவேச உரிமை கடுமையாக மறுக்கப்பட்டுவந்தது. காந்தியடிகள், சித்தரஞ்சன தாஸ், லாலா லஜபதிராய், பண்டித ஜவஹரிலால் நேரு முதலியவர்கள் திருவாங்கூருக்குச் சென்றபோது தடைக்கஞ்சிக் கோவிலுக்குச் செல்லவில்லை. சின்னாட்களுக்கு முன்னர் சித்திரைத் திருநாள் மன்னர் அரியாசனம் ஏறியபோது இந்த அக்கிரமத்தை ஒழித்துவிட்டார். இப்பொழுது மன்னரின் அன்னையார் சேது பார்வதிபாய் அவர்கள் ஐரோப்பியச் சுற்றுப்பிரயாணம் செய்யத் துணிவு கொண்டுவிட்டார். கடும் வைதிகம் நிறைந்த நாட்டில் அதிலும் ஒரு பெண்பால் கடல் கடந்து செல்லல் திருவாங்கூர் மக்களின் நற்கால அறிகுறியேயாகும்.

# "கட்செவி."

# ஐய வினா விடையில் ஐயம்.



தைத் திங்கள் வெளியீடு 496-ம் பக்கத்தில் திரு. எஸ். ஆர். அத்தியப்பன் என்பவர் பாம்பிற்கு 'கட்செவி' எனப் பெயர் வருவானேன்? இதுபற்றிப் பண்டையோர் கருத்து யாது? இவைகளை அறிந்தோரை அறிவிக்கவேண்டியுள்ளார்.

பங்குனித் திங்கள் வெளியீடு 655-ம் பக்கத்தில் திரு. கே. எஸ். வேங்கடசப்பன், பி. ஏ. எல். டி. என்பவர் பாம்பிற்கு 'கட்செவி' என்னும் பெயர் பொருந்துமா? பொருந்தாதா? என்பதைக் கவனிப்பதற்கு முன்பாகத் தற்காலம்வரையிலுள்ள ஆராய்ச்சிக்காரர்கள் கூற்றையும், பிராணிவல்லுநர்கள் கூற்றையும் கூறி, பாம்பிற்கு 'கட்செவி' என்ற பெயரினைச் சாதிப்பது கடினமென்றே கழறுகின்றார். எக்காரணம் பற்றி நம்முன்னோர்கள் பாம்பிற்கு 'கட்செவி' எனப் பெயரிட்டார்களோ அறிகிலோம் என அன்பரே ஐயப் படுகின்றார்.

'கட்செவி' என்ற சொல் (பண்டை) தமிழ் நூல்களில் தான் பயிலப்படுகின்றதே யன்றி, வேறு மொழி நூல்களில் பயிலப்படுவதாகத் தெரியவில்லை. அங்ஙனமிருக்க நண்பர் (பண்டை) தமிழ் நூல்களை நன்கு ஆராய்ந்து இன்ன காரணத்தால் 'கட்செவி' என்பது பொருந்தும்; இன்ன காரணத்தால் பொருந்ாது என்பதை நிரூபிக்காது 'என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா' என்ற நூலில்கூட 'கட்செவி'யைப் பற்றிக் கூறவில்லையே என்கிறார். இதனால் நமக்கு பாம்பிற்கு 'கட்செவி' என்ற பெயர் வருவானேன் என்ற பழைய ஐயப்பாடே எழுகின்றது.

இறுதியில் ஒருவேளை பாம்பிற்கு, கண்ணுக்குப் பின்னால் இருக்கவேண்டிய செவித்துவாரம் இல்லாமையாலும், அது எப்பொழுதும் கண்ணைக் கொட்டாது விழித்துக்கொண்டிருப்பதாலும் அதற்குக் கேட்கும் திறமை வாய்ந்திருக்கின்றபடியாலும், தங்களுக்குச் சுலபமாய்த் தோன்றக்கூடிய கண்ணே செவியும் ஆயிருக்கலாம் என்று நண்பரே ஐயப்படுகின்றார். எது எப்படியாயினும் பாம்பிற்கு 'கட்செவி' என்பது பொருந்தாது என்கின்றார்.

ஆதலின் நற்றமிழ் உணர்ந்த பெரியோர்கள் தெற்றென உணர்த்தி எம் ஐயப்பாட்டை நீக்குவார்களாக!

ஓர் சந்தேகி.

---

# மரணபயம் இன்மையின் மாண்பு.

:(o):

(தெல்லிப்பழை-கா. சின்னப்பா.)

அகவல்.

எவ்வகைப் பிறப்பினு மெழிலுறு பிறவியென்
றிவ்வை யகத்தோ ரியம்பிடும் பிறவியாம்
மானிடப் பிறவியை மாண்புறப் பெற்று
நானிலந் தன்னில் நலிவுறச் செய்யும்
பயம்பல வருத்தநாம் பதைத்திட் டாலும்
இயம்பொணுக் கலக்கம் ஈந்திடும் பயமாய்
நினைக்கவும் விரும்பா நிலைதனை யளித்து
மனதினை வருத்தும் மரண பயத்தை
முற்று மொழித்து முழுமன தோடும்
கற்றோர் மனதைக் கவர்ந்திடு மீசனை
என்றும் துதித்து இன்புற் றிருந்திடில்
பொன்றுங் காலம் பொருந்திடும் போது
புன்சிரிப் புடனே பூமியி லுள்ள
அன்புபா ராட்டிய அனைவருங் காண
நம்முடல் நீக்கி இறைவனை யடைந்து
இம்மையி லனுபவம் எல்லாம் மறந்து
ஞானிகள் விரும்பும் நற்கதி தன்னை
வானவர் வாழ்த்த மாண்புடன் பெறுவோம்.
இந்நிலை விரும்பா திருப்பவ ரெவரும்
எந்நிலை தன்னி லென்று மிருப்ப
ரென்பதை யெவரும் எளிதி லுணர்ந்து
அன்புட னவர்க்கு அரியநற் போதனை
செய்துமே மரணம் சிவிய முடிவாய்
எய்துமோர் நிலையாய் எவர்க்கு மிருப்பதால்
பயந்துநா மடையும் பயனிலை யாதலால்
வியந்து விண்ணோரும் மெச்சிடத் தக்கதாய்
எந்த நேரமும் எவ்விடத் தாயினும்
சிந்தை எம்பிரான் சீர்கழல் தன்னிலே
பற்றியிருக்கும் பான்மையைப் பெற்றுப்
பெற்றோ ருற்றார் பெருந்துணை புரிவோர்
கற்றோர் மற்றோர் காதலைப் பெற்றோர்
சுற்றுப் புறங்களிற் சூழ விருப்போர்
ஆதிய பலரையும் அறவே மறந்து
சாதி பேதச் சண்டையும் விடுத்து
இப்பா ரதனில் எழிலுறு பொருளெனத்
தப்பெண்ணத்தால் தாவிப் பிடித்துப்
பற்றினைப் பெருக்கிப் பாசத் தமிழ்த்தும்
சற்றும் நிலையிலாத் தகைமை பொருந்திய
அனைத்தையும் விட்டு அகமும் புறமும்

தினைத்துணை யேனும் தீவினை தன்னில்
பற்றிடா திருந்து பரகதி தன்னைப்
பெற்றுப் பெறற்கரும் பேரின்ப மதனை
அல்லும் பகலும் அடைந்திட விரும்பின்
சொல்லரு நன்மை சுகித்துவாழ்ந் திடுவோம்.
மரண பயமென மாந்தர் நினைப்பதைத்
திரணமா யெண்ணிடச் சிவபெருமானின்
திருவரு ளன்றிநற் றிவ்விய சாதனம்
அரிதென் பதனை அனைவரு மறிந்து
இரவும் பகலு மிறைவன தருளைப்
பரகதி சேர்க்கும் பகரு மவுடதம்
எனவே யறிந்து இன்புடன் பெற்றுக்
கனவிலு மீசனைக் கருத்தி லிருத்திட
எல்லா இன்பமும் எய்திநாம் வாழ்ந்து
பொல்லா தெனநாம் புகன்றிடு மரணமும்
ஜெயமுடன் வாழ்ந்து சீவிய முடிவினில்
பயமிலா தடையும் பான்மை வாய்ந்த
நிலையொன் றென்பதை நிச்சய மாக
மலைவிலா துணர்ந்து மகிழ்வுற் றிடுவோம்.
உண்மைப் பக்தி யுள்ள எவர்க்கும்
நன்மையை யென்றும் நாடுபவர்க்கும்
புன்மையை யொழிக்கும் பொறுமையா ளர்க்கும்
காந்தியைப்போன்ற கனவான்களுக்கும்
சாந்தியைப்பெற்ற சனத்தலைவர்க்கும்
தாகூர்போன்ற சற்சனர்தமக்கும்
தேகந்துரும்பெனும் திடமுடையோர்க்கும்
மரணபயமேன் மனதிலிருக்கும்
அரன்பத மடைந்த அன்பருக்கேன்பயம்?
பயம்பாவிகளைப் பற்றிடுமன்றிச்
சுயநன்மைகருதாத் தூயரைமரணம்
துன்புறச்செய்து துஷ்டரைப்போல
இன்பங்கொடுப்பதை எவருமறியார்.
ஆதலாலிறைவனை அனுதினமும்நாம்
பேதமையகற்றிப் பெருமைவிடுத்து
அன்புடனர்ச்சித் தவனருள்பெற்று
இன்புடன்சீவித் தெவ்விதபயமும்
இன்றிப்பிறவியோ டினிப்பிறவாது
பொன்றிடுங்காலம் புன்சிரிப்போடு
ஈசனைப்பற்றி யிரண்டறக்கலந்து
பேசருமின்புடன் பெருங்கதிபெற்று
மரணமோர்பயமிலா மானிடர்சீவியத்
தரியவோர்முடிவென அறிவுளோரறைந்த
பேருண்மைதன்னைப் பிறர்க்கறிவித்து
யாரும்போற்றிட நாமுய்வோமே.

# சிறுமணித் திரட்டு.

கொட்டைப் பாக்கு வயிற்றிலுள்ள திமிர்ப்பூச்சி முதலிய பல கிருமிகளை அழிக்கும் சக்தி வாய்ந்ததாம்.

* * *

ஜப்பானுக்கும் கிழக்கு இந்தியத் தீவுகட்கும் இடையேயுள்ள கடலின் ஆழம் 24,416 அடியாம்.

* * *

பிரேதங்களைப் புதைக்கும் வழக்கத்தை விட்டுச் சுட்டெரிக்கவேண்டும் என்ற இயக்கம் துருக்கியில் தோன்றியிருக்கிறது.

* * *

பிரிட்டிஷ் மன்னரின் மகுடத்தைப் புதுப்பிக்க மூன்று மாதங்கள் பிடித்தனவாம். இப்பொழுது மேலும் ஒரு அங்குலம் உயரமாயிருக்கிறதாம். முத்துச் சிப்பி ஒரே சமயத்தில் 500000 முட்டை யிடுகின்றதாம்.

* * *

எகிப்தியர் நாலாயிரம் ஆண்டுகட்கு முன்னரே பல் வைத்தியம் செய்வதிலும் பல் கட்டுவதிலும் நிபுணத்துவம் பெற்றிருந்தார்களாம்.

* * *

இப்பொழுது, உலகில், சோவியத் நாடுகள் மட்டும் வேலையில்லாத் திண்டாட்டம் இன்றி இருக்கின்றனவாம்.

* * *

97,000 பிரிட்டிஷ்காரர்கள் இன்னும் வரிகொடாமலே ஏய்த்து வருகின்றனராம்.

* * *

ஒரு அவுன்ஸ் தங்கத்தைச் சுமார் 300 சதுர அடியுள்ள மெல்லிய தகடாக அடிக்கமுடியுமாம்.

* * *

ஸ்காட்லாந்திலும் வேல்ஸிலும் ஈக்களையும் சிறு சிறு புழுக்களையும் பிடித்துத் தின்னும் செடிகள் மிகுதியாக இருக்கின்றனவாம்.

* * *

நவரத்தினங்களில் ஒன்றான மரகதப் பச்சையை அணிந்தால் அணிந்தவர்களுடைய கண்ணொளியை அது அதிகப்படுத்தும் என்று சொல்லப்படுகிறது.

* * *

இங்கிலாந்தில் இப்பொழுது தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறதாம்.

* * *

தானிய வகைகளில் பயறு தேகத்திற்குக் குளிர்ச்சியைத் தரக்கூடியதாம்.

* * *

பூமியின்மீது 6000 கோடி லக்ஷம் ஜனங்கள் ஜீவிக்கப்போதிய இடவசதி இருக்கிறதாம்.

* * *

ஒரு ஏக்கர் நிலத்தில் புகையிலையைச் சாகுபடி செய்தால் சுமார் 700 டன் புகையிலை கிடைக்குமாம்:

# கூந்தல் அலங்காரச் சிங்காரம்




சிங்கார ஜோடனை என்றால் பெண்களுக்குப் பிரீதி. ஆடையலங்காரம் பல ரகமாயிருப்பதுபோல் கூந்தல் அலங்காரத்திலும் பல தினுசுகள் உண்டு. மாதிரிக்குச் சில வகைகளை இப்படத்தில் காணலாம். எது நாகரிகம் என்று முடிவுகட்ட உங்களால் முடியுமா? ஒரு கை பாருங்கள்.




**பாம்பின் தலையைத் தின்றவர்:**—மைசூர் சமஸ்தானத்தில் புரொபெசராக இருக்கும் எல். எஸ். ராவ் என்பவர் சமீபத்தில் பம்பாயிலுள்ள கோகுலதாஸ் தேஜ்பால் ஆஸ்பத்திரி பிரசங்க மண்டபத்தில் பற்பல பிரபலஸ்தர்கள் முன்னிலையிலும், தமது மனைவியின் முன்னும், கண்ணாடித் துண்டுகளை மென்று தின்று ஒரு அவுன்ஸ் அக்கினித் திராவகத்தைக் குடித்துவிட்டு இறுதியில் பயங்கரமான மற்றொரு வேடிக்கையைக் காண்பித்தார். அதாவது உயிருடன் ஓடிய விரியன் பாம்பின் தலையைக் கடித்து மென்று தின்றார். அனைவரும் திடுக்கிட்டனர். அவர் இவ்வாறு செய்ததற்குத் தன்னிடம் தெய்வசக்தி ஒன்றுமில்லை யென்றும், தான் அனுஷ்டிக்கும் விஞ்ஞான சாஸ்திர முறைகளே காரணமென்றும் கூறினர்..

***

**இரத்தம் அளிக்கும் உபகாரி:**—பாரிஸ் நகரில் பிரேத அடக்கம் செய்யும் தொழிலைக் கவனித்துவரும் ரைமண்ட் பிரீஜ் என்பவர், நோயாளிகளுக்கு, அவர்கள் சுகமடைவதற்காகத் தன் தேகத்திலுள்ள இரத்தத்தைக் கொடுத்து அவர்களுடைய உயிரைக் காப்பாற்றி வருகிறார். இதுவரை இவ்வாறு 452 பேர்களுக்குத் தன் இரத்தத்தைக் கொடுத்துக் காப்பாற்றியிருக்கிறாராம். இவ்வாறு இரத்தம் கொடுப்பதற்காக அவர் எத்தகைய பணத்தையும் வாங்குவதில்லை. ஏழைகளுக்கே அவர் தனது இரத்தத்தைக் கொடுக்கிறார். இதுவரை அவருடைய தேகத்திலிருந்து 27 காலன் இரத்தம் செலவாகி யிருக்கிறதாம். இப்போதுதான் அவருக்கு வேதனை தெரிகிறதாம்.

***

**இங்கிலாந்தில் சூனியக்காரிகள்:**—சென்ற 17-வது நூற்றாண்டில் இங்கிலாந்திலுள்ள ஜனங்கள் சூனியக்காரிகளிடம் கோபங்கொண்டு அவர்களை உயிருடன் கொளுத்தினார்கள். ஆனால் இக்காலத்திலும் இங்கிலாந்தில் சூனியக்காரிகள் இருக்கிறார்களாம். அவர்கள் ஆண் பெண்கள் ஒருவரை யொருவர் காதலிப்பதற்கும், நோய்களைப் போக்குவதற்கும், பிறருடைய சொத்துக்கள் அழிவதற்கும் உதவி புரிகிறார்களாம்.

***

**கண்ணைப் பிடுங்கிய காதகன்:**—மட்டிகாரா என்ற ஊரை நோக்கி 4 ஏழை மக்கள் புறப்பட்டு நடந்துவந்துகொண் டிருந்தனர். அவர்களுள் 10-வயதுப் பெண்ணொருத்தியும் மற்றுமொரு ஆணும் பிணியாளர்களாய், நடக்கவும் சக்தியில்லாமல் நடந்து வந்த களைப்பினாலும் அயர்ச்சியினாலும் பேசவும் முடியாமல் ஒரு மரத்தின்கீழ்ப் படுத்துவிட்டார்கள். கூட வந்த மற்றிருவரும் அருகிலிருந்த ஊருக்குள் சென்று உணவு தேடிவரப் போயினர். இதற்குள் சாம்கிஸ்ஸன் என்னும் ஒருவன் அவ்வழி வந்து மரத்தடியில் கிடந்த இருவர்மீதும் ஏறி உட்கார்ந்துகொண்டு அவ் விருவரின் கண்களையும் கைவிரலால் தோண்டி யெடுத்துக் கையில் வைத்துக்கொண்டு ஓர் இரும்புக்கம்பியால்

அவர்களின் நாக்கில் துவாரங்களிட்டானும். பிறகு இரத்தந் தோய்ந்த கைகளுடனும் வீதியில் சென்றுகொண் டிருக்கையில் அவனைப் போலீஸார் கைது செய்து விட்டனர்.

***

உலகில் சிறந்த நாடு:—பிரபல ஆங்கில ஆசிரியரான மாக்ஸ் முல்லர், இந்தியாவே, செல்வம், வன்மை, அழகு, வளம் முதலியவற்றால் இயற்கை வடிவங் கொண்டு பூலோக சுவர்க்கமாய் விளங்குகிறதென்றும், அதுதான் உலக மக்களிடையே தோன்றும் தவறான அபிப்பிராயங்களைத் திருத்தி ஆத்மஞான வாழ்க்கையை அளிப்பதற்கு வழிகாட்டியா யுள்ளதென்றும் கூறியுள்ளார். இந்தியாவே வாழ்க்கையின் சிக்கலான பிரச்சினைகளை ஆழ்ந்த ஆலோசனைக்குப் பின் முடிவுக்குக் கொண்டுவரக்கூடிய தத்துவஞானம் நிரம்பியதென்பது அவரது கருத்து.

***

மயிரால் வண்டியிழுத்த மங்கை:—பூனாவில் புரொபாஸர் காவாஸ் தலைமையில் ஒரு ஸர்க்கஸ் கம்பெனி நடந்து வருகின்றதாம். அதில் பலவிதமான ஆச்சரிய வேலைகள் செய்யப்படுகின்றன வெனினும், அந்த புரொபெஸரின் சிஷ்யையாகிய மிஸ் ஹெலினு என்னும் முஸ்லிம் ஸ்திரீ பெரும் இரும்புச் சட்டங்களை வளைப்பதுடனில்லாமல் நிறையப் பளுவேற்றப்பட்ட ஒரு மாட்டு வண்டியைத் தன் தலைமயிரைக் கட்டி அதனால் இழுத்துவிடுகின்றனளாம்.

***

புலி வயிற்றில் மனிதன்:—பரோடா சமஸ்தானத்திற்குச் சுமார் 10-மைல் தூரமுள்ள ஒரு காட்டில் பரோடா யுவராஜாவான பிரதாப்சிங் ராஜ் சென்ற வாரத்தில் இரண்டு புலிகளை வேட்டையாடிச் சுட்டுக் கொன்றுவிட்டார். மணிக்கம் ஏஜென்ஸி என்று சொல்லப்படும் இடத்திலுள்ள கிராமங்களில் மிகுந்த அட்டூழியம் செய்து கொண்டிருந்ததாகச் சொல்லப்பட்டுவந்த ஓர் ஆண் புலியையும் ஒரு பெண் புலியையும் ஜேனுட் தர்பார் சாஹிப் என்பவர் வேட்டையாடிச் சுட்டுக் கொன்றுவிட்டார் என்றும் சமாசாரம் கிடைத்திருக்கிறது. மேலே சொல்லப்பட்ட தர்பார் சாஹிபால் மாகி ஆற்றங்கரையில் சுட்டுக் கொல்லப்பட்ட மற்றொரு புலியின் தோலை அறுத்துப் பார்த்தபோது அதன் வயிற்றில் ஒரு மனித சரீரம் அடங்கி இருந்தது கண்டு பிடிக்கப்பட்டதாம்.

***

முழு அழகியே இல்லை:—உலகில் எந்தப் பெண்ணும் தான் பூரண அழகியென்று கூறிக்கொள்ள முடியாதாம். 100-க்கு 50 பங்கு அழகியே உலகில் ஒருவர்கூட இல்லையெனின், மற்றையோரைப்பற்றிக் கூறுவானேன்? 50-பங்கு அழகி வீதி வழியே சென்றால் வழிப்போக்கர்களனைவரும் அப்படியே பிரமித்து நின்று விடுவாராம். ஆனால், அப்படிப்பட்ட பெண்ணின் அழகில் மற்றோரைம்பதுபங்குக் குறையிருக்கிறதாம். 25-பங்கு அழகியே பார்ப்போர் மனத்தை உருக்கி விடுவளாம். மற்றை அழகிகளெல்லாம் 100-க்கு 10-பங்கு அழகிகளேயாம் என்று அழகு நிபுணர் எம். மன்னுவி என்பார் கூறுகின்றார்.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்)

(799-ம் பக்கத் தொடர்ச்சி.)

இரண்டொரு நிமிஷமான பின் நான் சபாபதி முதலியாரைப் பார்த்து "இன்று நடந்த விஷயங்களை என்னால் நம்பவே முடியவில்லை. எல்லாம் கனவில் நடந்த விஷயமாய்த் தோன்றுகின்றன. எனக்குக் கலியாணம் செய்து கொள்ளுவதிலேயே கொஞ்சமும் இஷ்டங் கிடையாது. இப்படியிருக்க இன்று என்னை யறியாமலே இந்தக் கலியாணத்திற்கு சம்மதித்து விட்டேன்" என்று சொல்ல சபாபதி முதலியார் "இதற்காக நீங்கள் வருத்தப்படவேண்டிய காரணமில்லையே. இப்பொழுது நீர் மாப்பிள்ளையானால் இன்னுங் கொஞ்ச நேரத்தில் நீர் மனைவி இழந்தவராகப்போகிறீர்" என்றார்.

அவர் சொல்லுவதைக் கேட்டு நான் மௌனமாயிருந்தேன். அவர் சொன்ன வார்த்தைகளிலிருந்தே, பூர்ணலிங்க முதலியார் தன் பெண்ணை என்னைவிட்டுக் கொலை செய்யச் சொல்லுவதின் காரணம் அவருக்குத் தெரிந்திருக்கவேண்டுமென்று நானறிந்து கொண்டேன். ஆனால் நான் இவ்விதம் அறிந்து கொண்டதாகக் காண்பித்துக் கொள்ளாமல் "ஆம், என்னுடைய அனுபவம் மிக்க அதிசயமானதே" என்று கூறிவிட்டுச் சும்மா யிருந்தேன்.

அடுத்த நிமிஷம் சபாபதி முதலியார் எனக்கு ஒரு உயர்தரமான சுருட்டுக் கொடுத்தார். தானும் ஒரு சுருட்டைப் பற்றவைத்துக்கொண்டார். உண்மையிலேயே நான் பட்ட மனோவிசாரத்தால் ஒரு சுருட்டு பிடிக்க வேண்டுமென்றே ஏங்கி யிருந்தேன். சமய சஞ்சீவியைப்போல் அந்தச் சுருட்டை அவர் எனக்குக் கொடுத்தாராகையால் நானும் அதைப் பற்றவைத்துக் கொண்டேன். அப்பால் சபாபதி முதலியார் தன்னுடைய நண்பரின் புத்திரியாகிய மீனாளைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். இந்த மனோ வியாதி யுண்டாவதற்கு முன் அவள் இருந்த உல்லாச நிலைமையைப்பற்றி யெல்லாம் சொன்னார்.

"அவள் இப்பொழுது எதனால் தேக அசௌக்கியப் பட்டுக்கொண்டிருக்கிறாள்?" என்று நான் கேட்டேன்,

"அவள் இன்ன வியாதியினால் தான் பீடிக்கப்பட்டிருக்கிறாளென்று உங்களைப் போலுள்ள டாக்டர்களுக்குத்தான் தெரியுமே யல்லாது எனக்கென்ன தெரியும்? ஆனால் பெருத்த பெயருள்ள டாக்டர்கள் வந்து போனார்

கள்; அவர்களெல்லோரும் ஒரே அபிப்பிராயமாக இது மனோ வியாதியே தவிர சரீரத்தில் ஏற்பட்ட வியாதியில்லையென்றும், இந்த மனோவியாதியினால் இன்று இரவிற்குள் அவள் மரணமடைதல் நிச்சயமென்றும் சொல்லிவிட்டுப் போய் விட்டார்கள். பூர்ணலிங்க முதலியார் தன்னாலானவரை பணத்தாலும் சரீரத்தாலும் முயன்று பார்த்தார்! மீனாள் பேரில் அவருக்கு உள்ள அன்பு கரை கடந்தது!" என்றார் சபாபதி முதலியார்.

உண்மைக்கும் இவர் சொல்லிய வார்த்தைகளுக்கும் வெகு தூரமென்று நான் சிந்தித்தேன். மீனாள் பேரில் இவர் கூறுவதுபோல் பூர்ணலிங்க முதலியாருக்குக் கரை கடந்த அன்பு இருக்குமாயின் அவருடைய மனம் அவளைக் கொலை செய்யச் சொல்லவும் ஒப்புமா? ஒருநாளும் ஒப்பாது! ஏதோ ஒரு மர்மமான காரணம் பற்றியே அவர் அவளை யொழித்துவிடப் பார்க்கிறாரென்று நான் ஸ்திரப்படுத்திக்கொண்டு அக்காரணம் என்னவா யிருக்கலாமென்று யோசித்த வண்ணம் ஆழ்ந்த சிந்தனையி லிருந்தேன்.

இந்த சமயத்தில் ஒரு ஸ்திரீ கத்துவதுபோல் எனக்குக் கேட்டது. ஆபத்தில் உதவி கேட்கும் ஒரு ஸ்திரீயினுடைய ஈனக்குரலாக எனக்குக் கேட்டபடியால் அதைக் கேட்டவுடன் என் உடல் துடித்தது. ஒரு நிமிஷம் ஒன்றுந் தோன்றாமல் சும்மா யிருந்தேன். அப்பால் அதே சப்தம் மறுபடியும் கேட்டது. ஆனால் இம்முறை அது நிரம்பவும் ஹீனமாயிருந்தது. அடுத்த க்ஷணம் உண்மை யறிந்து கொண்டேன். பூர்ணலிங்க முதலியார் அந்த சமயம் தன் பெண்ணினறையிலேயே யிருந்துகொண்டிருக்க வேண்டுமென்று என் மனதில் தோன்றிய படியால் நான் குதித்தெழுந்து அறையைக் கடந்து மெத்தைப்படி வழி யேறினேன். ஒரு வேளை தகப்பனே பெண்ணைக் கொன்று விடுவானோ வென்ற சந்தேகம் என்னை வாயுவேகமாய் மெத்தை யறைக்கு யிழுத்துச் சென்றது.

நான் மேலே சென்றதும் பூர்ணலிங்க முதலியார் ஒரு அறையின் வாயிற் படியில் நின்றுகொண்டு நான் அவ்வறைக்குள் நுழையாவண்ணம் என்னைத் தடுத்துக்கொண்டு நின்றார். அதுவே என் மனைவி மீனாளின் அறையாக விருக்க வேண்டுமென்று யூகித்துக் கொண்டேன். கதவோ மூடப்பட்டிருந்தது.

"என்னை யேனையா தடுக்கிறீர்கள்? என்னை யுள்ளே போகவிடுங்கள்" என்று மிகுந்த கோபமாகத் துடிதுடிப்புடன் கேட்டேன். உடனே அவர் "நீர் போகக்கூடாது!" என்று கூறியவண்ணம் என்னை யுள்ளே போக விடாமல் தடுத்தபடியே நின்று கொண்டிருந்தார்.

"உமது புத்திரி சற்றுமுன் கத்தினாள். அவளை இப்பொழுது போய்ப் பார்க்கவேண்டிய தவசியம். அவளருகிலிருக்க வேண்டியது என் கடமை" என்று படபடப்புடன் சொல்ல அவர் "கடமையா! ஐயா! டாக்டரவர்களே! நீர் உம்மையே விற்றுப் பணமாக்கிக் கொண்டீர். உமக்கு கடமை யென்றும் ஒன்று இருக்கிறதா?" என்று பேசினார்.

அவர் சொன்ன சொல் என் இருதயத்தைப் பிளந்துவிட்டது. அவர் பேசப் பேச அவர்பேரிலுள்ள என்னுடைய கோபமும் அதிகரித்துக் கொண்டே வந்தது. இருந்தாலும் என்னுடைய கோபத்தைக் காண்பித்துக் கொள்ளாமல் நிதானமாக அவரைப் பார்த்து "நீர் பணத்தைக் காட்டி என்னை உம்முடைய வலையிற் கட்டிவிட்டீர், உண்மைதான்; இல்லையென்று நான்

சொல்லவில்லை. ஆனால் மனிதனாகப் பிறந்த எனக்கு மனிதத்தன்மை யென்பது கொஞ்சமாவது இருக்கின்றது. உம்மைப்போல இல்லை. ஆஹா! கடவுளே என்பக்கமிருந்து நீர் சொல்லும் இக்கொடிய சங்கதியைச் செய்யா வண்ணம் என்னைத் தடுத்துவிட்டார்! இந்த மன்னிக்கக்கூடாத பாவத்தினின்றும் தப்பிவிட்டேன், இனிப் பயமில்லை!" என்றேன்.

இதைக் கேட்டதும் அம்மனிதர் ஏளனமாக என்னைப் பார்த்து நகைத்தார். அந்த அறையின் வாயிற்படியிலேயே அசையாமல் அவர் நின்றுக்கொண்டிருந்தார். மிக அதிசயமாக எனக்கு மணம் செய்து கொடுக்கப்பட்ட மீனாள் அவ்வறைக்குள்ளிருக்கிறாள்! அவளைச்சுற்றி சிக்கலான மர்மம் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அவள் யாராயினும், அவளையும் தப்புவித்து அம்மர்மத்தையும் கண்டுபிடிக்க வேண்டுமென்று உறுதி கொண்டேன். இதற்காக என்னுடைய உயிரையும் கொடுக்கத் தயாராயிருந்தேன்.

ஒரு நிமிஷங் கழித்து பூர்ணலிங்க முதலியார் என்னைப் பார்த்து "உமக்குப் பணம் தேவையாயிருந்தது நான் கொடுப்பதாகச் சொன்னேன். நீர் வேண்டாமென்று சொல்லிவிட்டீர். அப்பால் என்ன இருக்கிறது?" என்றார். உடனே நான் "ஓஹோ! இத்தோடு முடிந்துவிட்டதாக உமது எண்ணமோ? பொழுது விடிந்துபோவதற்குள் நீர் என்ன பாடுபடப்போகிறீர் பாரும்" என்று சொன்னேன். இதற்கும் அவர் ஏளனமாகவும் அசட்டுத்தனமாகவும் சிரித்தார். எனக்கு அடங்காக் கோபம் உண்டானபடியால நான் அவரைப் பார்த்துப் படபடக்க "இப்பொழுது வழியை விடப்போகிறீர்களா? என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கைச்சண்டைக்குக் கூப்பிடுவதுபோல் கேட்டேன்.

என்னுடைய சொல்லுக்கு இணங்குவதுபோல் அவர் இரண்டடிகள் ஒதுங்கிக் கொண்டார். எனக்கே ஆச்சரியமாயிருந்தது. ஆனால் அடுத்த க்ஷணம் ஆச்சரியம் பறக்க, என் மனதில் அச்சம் குடிகொண்டுவிட்டது.

பூர்ணலிங்க முதலியார் தன்னுடைய வலக்கரத்தில் ஒரு துப்பாக்கியை வைத்துக் கொண்டிருந்தார். அதை என்னுடைய பார்வையினின்றும் மறைக்க அவர் முயன்றார். ஆனால் நான் அதைப் பார்த்துவிட்டதையும் அவர் கண்டுகொண்டார். நேயர்களே! அவர் துப்பாக்கியை வைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து முதலில் சற்று பயந்துவிட்டேனே யல்லாது அப்பால் என் பயமெல்லாம் எங்கோ ஓடிவிட்டது. என்னுடைய உயிரையே நான் லட்சியம் பண்ணாமலிருந்தேன். மீனாளென்னும் மாதைச் சூழ்ந்திருக்கும் அதிசயமான மர்மத்தைப்பற்றியே என் மனம் சூறையாடிகொண்டிருந்தது. நான் இவ்வளவு சிரத்தை யெடுத்துக் கொள்வதன் காரணம் நான் மீனாளின் நாடிகளைப் பரிசோதித்துப் பார்த்தே அவளை யெக்காரணத்தாலும் இந்தக் கிழவனுக்கு இரையாக விட்டுவிடக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டேன். துப்பாக்கியினுதவியினால் என்னையே பூர்ணலிங்க முதலியார் தீர்த்துவிடத் தயாராயிருந்தாராகையால் அடங்காக் கோபத்துடன் என் தேகம் துடித்தது. உண்மையில் நான் சரீர வலிமையுடையவன். உடனே நான் குபீரென்று பூர்ணலிங்க முதலியார்மீது பாய்ந்து அவரைப் பிடித்திழுத்துக் கீழே யெறிந்துவிட முயன்றேன். அப்பப்பா! நான ஏதோ சாமானியமாக நினைத்துவிட்டேன்! அந்த மனிதருடைய பலமோ ஒரு யானையின் பலமாயிருந்தது. அவருடைய கைகால்கள் எஃகினாலாக்கப்பட்டவைபோல் அவ்வளவு வலிவாயிருந்தன.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

ஆங்கீரஸ௵ ஆனிமீ—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855,
பசலி 1341-42, கொல்லமாண்டு 1107, ஹிஜரி 1351,
இங்கிலீஷ் 1932௵ ஜூன்மீ—ஜூலைமீ

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [சிதி புண்யகாலம் |
| 1 | 14 | செவ் | தச9-50 | சித்36-55 | சித்60 | மிதுனரவி நா-3-33, ஷட |
| 2 | 15 | புத | ஏகா2-48 து54-55 | சுவா31-30 | சித்60 | சர்வ, மத்வ, ஏகாதசி, இராம லக்ஷமண துவாதசி |
| 3 | 16 | வியா | திர46-45 | விசா25-30 | சித்60 | தானியம் செலவிட |
| 4 | 17 | வெ | சது38-38 | அனு19-23 | சி19-23மா | வியாதியஸ்தர்மருந்துண்ண |
| 5 | 18 | சனி | ○30-55 | கே13-38 | சித்60 | பௌர்ணமி, ரிஷப பூஜை |
| 6 | 19 | ஞா | பிர24-13 | மூல8-25 | அ8-25சி | |
| 7 | 20 | திங் | துதி18-40 | பூரா6-53 | மா60 | |
| 8 | 21 | செவ் | திரி14-35 | உத்1-58 | அ1-58சி | |
| 9 | 22 | புத | சது12-38 | திரு1-23 | சி1-23பிர | |
| 10 | 23 | வியா | பஞ்12-33 | அவி2-45 | சி2-45மா | |
| 11 | 24 | வெ | சஷ்14-38 | சத6-15 | சித்60 | |
| 12 | 25 | சனி | சப்18-48 | பூர11-25 | ம11-25சி | |
| 13 | 26 | ஞா | அஷ்23-33 | உத்18-0 | அமி60 | |
| 14 | 27 | திங் | நவ29-30 | ரே25-25 | சித்60 | |
| 15 | 28 | செ | தச35-43 | அஸ்33-3 | சித்60 | |
| 16 | 29 | புதன் | ஏகா41-30 | பர40-20 | சி40-20அ | |
| 17 | 30 | வியா | து46-35 | கி✽46-55 | மா60 | கிருத்திகை, கூர்ம ஜயந்தி |
| 18 | 1 | வெ | திர50-35 | ரோ52-25 | அமி60 | விவாகம், கிருஷியாரம்பம் |
| 19 | 2 | சனி | சது53-20 | மிரு56-45 | சித்60 | மாசசிவராத்திரி, ஆபரணம் |
| 20 | 3 | ஞா | ●அ55-0 | திரு59-55 | சித்60 | சர்வத்ர அமாவாசை [பூண |
| 21 | 4 | திங் | பிர55-18 | புன60 | அமி60 | ஆஷாட சுத்தம் |
| 22 | 5 | செவ் | துதி54-48 | புன2-0 | சித்60 | சந்திர தெரிசனம் |
| 23 | 6 | புத | திரி53-13 | பூச3-3 | சித்60 | சர்வ முகூர்த்தம் |
| 24 | 7 | வியா | சது50-53 | ஆயி3-13 | சி3-13அமி | கோதாவரி புஷ்கரம் |
| 25 | 8 | வெ | பஞ்47-40 | மகம்2-38 | மர2-38சித | ஸ்கந்த பஞ்சமி |
| 26 | 9 | சனி | சஷ்43-50 | பூரம்0-45 உத்59-10 | சி0-45மா | சஷ்டி, குமார சஷ்டி, அவமாகம், ஆனித் திருமஞ்சனம் |
| 27 | 10 | ஞா | சப்39-18 | அஸ்56-18 | அ56-18சி | சர்வ முகூர்த்தம் |
| 28 | 11 | திங் | அஷ்34-5 | சித்52-50 | பி52-50அ | சுபகாரியங்கள் விலக்க |
| 29 | 12 | செவ் | நவ28-18 | சுவா48-50 | சி48-50மா | வியாதியஸ்தர் குளிக்க |
| 30 | 13 | புதன் | தச22-0 | விசா44-30 | சித்60 | லக்ஷ்மி விரதாரம்பம் |
| 31 | 14 | வியா | ஏகா15-30 | அனு39-50 | சி39-50பி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 32 | 15 | வென் | துவா8-58 | கே35-23 | ம35-23அ | கடகரவி நா-30-38-வி |

1932௵ ஜூலைமீ

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சூரி பு.சுக் |
| ராகு | 15-கட-புதன் 24-சிம்-குரு | | குரு |
| சனி | | | கே |
| | | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.